ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அருளிச்செயல் அநுபவம்

## இடைப்பகுதி



இரண்டாம் பாகம்

பதிப்பாசிரியர் :

ஸ்ரீ உ. வே. வேளுக்குடி

கே. வரதாசாரியர்

1988

முதற் பதிப்பு - 1988

பிரதிகள் - 1000



*This Book is Published with the Financial Assistance of TIRUMALA TIRUPATI Devasthanams Under their Scheme 'Aid to Publish Religious Books'*

புத்தகம் கிடைக்குமிடம் :

ஸ்ரீ K. வரதாசாரியர்,
15, தம்புசெட்டித் தெரு,
சென்னை-1.
தொலைபேசி எண் : 512683

அச்சிட்டோர் :

இளங்கோ அச்சுக்கூடம்
166, இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
மயிலாப்பூர், சென்னை-4.
தொலைபேசி எண் : 74121

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

அருளிச்செயல் அநுபவம்

# பரத்வாதி பஞ்சகம்

# முன்னுரை

திருவஷ்டாக்ஷரம்

"மாநாதீநா மேய ஸித்தி:" என்பர். ப்ரமேயம் ஸித்திப்பது ப்ரமாணத்தாலேயிறே. ஆதௌ வேதா: ப்ரமாணம் என்கிறபடியே மூலப்ரமாணம் நிரபேக்ஷப்ரமாணம் அபௌருஷேய ப்ரமாணம் வேதம். இஃது வேதம் என்றும் வேதாந்தமென்றும் வேதாந்த ஸாரம் என்றும் மூன்றாகப் பிரியும்.

வேதத்திலே கூறப்பட்ட தர்மம் கர்மமாகும். வேதார்த்த விசாரம் கர்ம விசாரம் செய்கிறார் ஸ்ரீஜைமினி பகவான். இது கர்ம மீமாம்ஸையான பூர்வமீமாம்ஸை. வேதாந்தங்களிலே கூறப்பட்ட தர்மம் பக்தி ரூபாபந்நஜ்ஞாநம். வேதாந்தார்த்த விசாரம் செய்கிறார் ஸ்ரீவேதவ்யாஸ பகவான். இது உத்தரமீமாம்ஸை—வேதாந்த ஸாரம் ரஹஸ்ய த்ரயமாகும். இது தன்னில் கூறப்பட்ட தர்மம் ஸாக்ஷாத் தர்மமான பகவான். "ராமோ விக்ரஹவாந் தர்ம:" "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" என்றுநின்றதிறே. வேதார்த்தமான கர்மமும் வேதாந்தார்த்தமான பக்தியும் தர்மம் எனப்படுவதே பகவத் ஸம்பந்தத்தாலேயிறே. அவ்யவஹித தர்மம் பகவானே. ரஹஸ்யத்ரய விசாரம் ரஹஸ்யத்ரயமீமாம்ஸை எனப் படும். கர்மமீமாம்ஸை பதினாறு அத்யாயங்கள் கொண்டது ஜைமினி கர்த்ருகம். முதற் கண் பன்னிரண்டு அத்யாயங்களில் கர்ம விசாரமும் மேலில் நான்கு அத்யாயங்களில் தேவதா விசாரமும் செய்கிறார் ஜைமினி. இது தேவதா காண்டம் எனப்படும். இது காசக்ருத்ஸ்ந ப்ரகாசிதமாகையால் காசக்ருத்ஸ்நீயம் எனப்படுகிறதத்தனை. இத்தேவதா காண்டமும் கர்ம காண்ட சேஷமாகையால் கர்ம காண்டம் என்றே கூறப்படும். ஆகையாலேயிறே ஸ்வாமி எம்பெருமானார் ப்ரஹ்மஸூத்ர வ்யாக்யாநாரம்பத்தில், "அத—கர்ம விசாராநந்தரம்" என்றருளிச் செய்தார்—"தேவதா விசாராநந்தரம்" என்றருளிச்செய்திலர். மேலில் நான்கு அத்யாயங்கள் ப்ரஹ்மமீமாம்ஸை—மேலில் நான்கு அத்யாயங்களும் ஒன்று சேர்ந்து ஒரே மீமாம்ஸையாகும். வேதாந்த விசாரம் செய்த வ்யாஸர் பக்தி ரூபாபந்நஜ்ஞாநமான வேதாந்த விஹித தர்மத்தை விசாரிக்கிறார் ஆயினும் சாரீரகத்தில் ப்ரஹ்மஜிஜ்ஞாஸா" என்று ப்ரதிஜ்ஞை பண்ணினார். பகவானே ஸாக்ஷாத் தர்மம் என்பது அவர் திருவுள்ளத்தில் உள்ளேயுறையும் அர்த்தமே. அது தன்னை சாரீரகத்தில் வ்யக்தமாக அருளிச்செய்யாமல் பக்தியான

உபாயத்தை மூன்றும் அத்யாயத்திலும் முக்தியான உபேயத்தை நான்காமத்யாயத்திலும் ஸ்பஷ்டமாக வருளிச் செய்தார். "அதாதோ தர்மஜிஜ்ஞாஸா" என்ற கர்மமீமாம்ஸா திம ஸூத்ரமே க்ருத்ஸ்நமீமாம்ஸா சாஸ்த்ர ப்ரதிஜ்ஞா ஸூத்ரம் என்றும் நம்பூர்வர்களாலே கூறப்பட்டுள்ளது. பகவான் ஒருவனேயிறே ப்ராப்யமும் ப்ராபகனும் ஆவான். "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் நது குணௌ" என்றுரிறே ஸ்ரீ பராசரபட்டர்.

அவனுடைய உபாய உபேயத்வத்தை ஸாவ்யக்தமாக ஸாஸ்பஷ்டமாகக் கூறுமதிறே நாராயணபதம். தத்கடிதமான திருமந்திரமும் தத்விவரணமான த்வயசரம ச்லோகங்களுமிறே ரஹஸ்யத்ரயம். இதுவே வேதாந்த ஸாரம். இது தன்னில் பரமாத்மா சேஷீ சரண்யன் ப்ராப்யன் என வறுதியிடப்பட்டுள்ளான்.

இந்த ரஹஸ்யத்ரயத்தை உபதேசிக்கு மவனே ஆசார்ய பதத்துக்கு ஸாக்ஷாத் வாச்யார்த்தமாகிறான்.

நேரே ஆசார்யன் என்பது ஸம்ஸார நிவர்த்தகமான பெரிய திருமந்திரத்தை உபதேசித்தவனே (315) என்று ஸ்ரீவசநபூஷணம் கூறுகிறது.

"இத்தைச் சொல்லவே அவற்றினுடைய உபதேசமும் தன்னடையே சொல்லிற்றும். ஆகையால் இது ரஹஸ்யத்ரயோபதேசத்துக்கும் உபலக்ஷணம்" என்று பெரிய ஜீயர் வ்யாக்யாநமும் அத்ராநுஸந்தேயம். "வ்யஞ்ஜ்யந்தம் மநும் தம் தத்ப்ராயம் சத்வயமபி விதந் ஸம்மத: ஸர்வவேதீ" என்று அர்த்த பஞ்சகாதிகாராரம்பத்தில் தேசிகனும் அருளிச் செய்தார். வேதாந்த ஸாரமான இந்த ரஹஸ்யத்ரயத்திலும் வைத்துக் கொண்டு பெரிய திருமந்திரம் முதல் ரஹஸ்யம். முதற்கண் அறிய வேண்டிய ஸ்வஸ்வரூபத்தையுள்ளபடி தெரிவிக்கிறதாகையாலே ப்ரதமரஹஸ்யம். "தஸ்மை வ்யாபக முக்யாய மந்த்ராய மஹதே நம:" என்றருளிச் செய்தார் தேசிகன். அறியவேண்டும் அர்த்தமெல்லாம் இதுக்குள்ளேயுண்டு. "மற்றெல்லாம் பேசிலும்நின் திருவெட்டெழுத்து" (8. 10. 3) என்றருளிச் செய்தார் கலியன். முமுக்ஷுஜ்ஞாதவ்ய ஸகலார்த்த ப்ரதிபாதக மிறே திருவெட்டெழுத்து. இதினுடைய விவரணம் மேலில்ரஹஸ்யத்வயம். இம்மூன்றும் வேதாந்த ஸாரம். திருமந்திரத்தை பதரியில் நாறுக்கு நாராயணன் உபதேசித்தான். த்வயத்தை ஸ்ரீவிஷ்ணு லோகத்தில் பகவான் பெரிய பிராட்டிக்கு உபதேசித்தான். சரமச்லோகத்தை கீதாசார்யன் அர்ஜுநனுக்குபதேசித்தான். இம்மூன்றையும் ஒருசேர உபதேசித்தான் ஸ்ரீரங்க நாச்சியார்க்குத் திருவரங்கத் தெம்பெருமான். ஆகையால் குருபரம்பரையில் ப்ரதமாசார்யன் திருவரங்கனே—"லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்" என்றநுஸந்திக்கப்

படுகிற லக்ஷ்மீநாதன் திருவரங்கனே யென்பர் நம்பெரியோர். ஆழ்வார்களருளிச் செய்த நாலாயிரமும் அவனைப் பற்றியதே— "வடிவுடைவானோர் தலைவனே" என்னும் பரத்வமும், "கடலிடங் கொண்ட கடல் வண்ணா" என்னும் வ்யூஹமும் "கட்கிலீ" என்னும் அந்தர்யாமித்வமும் "காருந்தா கண்ணனே" என்னும் விபவமும் "வண் திருவரங்கனே"என்ற திருவரங்கனுக்கேயிறே. ரஹஸ்யத்ரய உபதேஷ்டா திருவரங்கன். ரஹஸ்யத்ரய விவரணம் அருளிச் செயல் நாலாயிரமுமாகும். அருளிச் செயல்களுக்கு விஷயமே திருவரங்கன். பரத்வாதி பஞ்சகமும் திருவரங்கனுக்கே யுள்ளது.

இனி திருவரங்கனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தில் பரத்வாதி பஞ்சகம் கூறப்பட்ட விடங்களை விரித்தநுபவிப்போமாக.

பரத்வாதி பஞ்சகக் குறிப்பாக நாலாயிர திவ்ய ப்ரபந்தப் பாசுரங்களை கைப்பிரதியாக எழுதி ஓர் ஸ்ரீவைஷ்ணவர் அடியே னிடம் பல்லாண்டுகளுக்கு முன்பே தந்தருளினார். அன்னார் ஓர் திவ்யதேசத்தில் ப்ரதாநாத்யாபகராக எழுந்தருளியிருந்து பல்லாண்டுகள் அருளிச்செயல் ஸேவை கைங்கர்யத்தை நடத்தி வந்த பெரியார். அவர் திருநாட்டுக்கெழுந்தருளி பலவாண்டுகள் ஆகிவிட்டன. அவர் இப்புத்தகத்தை வெளியிடவேண்டும் எனவும் தன் பெயரை வெளியிடக் கூடாதென்றும் நியமித்தருளினபடியால் அவர் தன் திருநாமத்தை அடியேன் வெளியிடத் துணியவில்லை. இப்புத்தகத்தை ஆங்காங்கே சில பல பரிஷ்காரங்களைச் செய்தும் சிலவற்றை விடுத்தும் உள்ளேன். அடியேனுடைய அஜ்ஞாந அநவதாசக்திகளால் இப்புத்தகத்தில் குற்றங்களும் குறைகளும் காணப்படும். பெரியோர்கள் தங்களுடைய ஸஹஜஸௌஹார்த் தாதீநமான க்ஷமையினால் பொறுத்தருளவேணும் என வேண்டு கிறேன். குற்றம் குறைகளை அடியேனுக்குத் தெரிவிப்பரேல் அடுத்த பதிப்பில் அவற்றைக் களைந்து வெளியிட வாய்ப்பாயிருக்கும் என்பதனையும் ஸவிநயம் விண்ணப்பிக்கிறேன்.

இப்புத்தகம் கைப்பிரதி சுத்தமான எழுத்தாக எழுதிக் கொடுத்த ஸ்ரீ. உ. வே. பா. சுந்தரராஜ (சுரேஷ்) அய்யங்கார் ஸ்வாமி திறத்தும், இப்புத்தகத்தை ஆமூலாக்ரம் நனருக கடாக்ஷித் தருளி பிழைகளைத் திருத்திக் கொடுத்தருளிய ஸ்ரீ. உ. வே. மஹா வித்வான். தி. அ. (திருப்பதி) க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி திறத்தும் அடியேன் தலையல்லால் கைம்மாறிலேன்.

இப்படிக்கு

சென்னை, வித்வஜ்ஜநவிதேயன்

1-8-88. கி. வரதாசார்யன்

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

நடாதூர் அம்மாள் என்று ஸுப்ரஸித்தரான

ஸ்ரீவாத்ஸ்ய வரதாசார்ய ஸ்வாமி பருளிச்செய்த

# பரத்வாதி பஞ்சகம்

வந்தேஹம் வரதார்யம் தம் வத்ஸாபிஜந பூஷணம் ।
பாஷ்யாம்ருதப்ரதாநாத் ய: ஸம்ஜீவயதி மா மபி ॥

1. உத்யத் பாநு ஸஹஸ்ர பாஸ்வர பரவ்யோமாஸ்பதம் நிர்மல-
ஜ்ஞாநாநந்தகந ஸ்வரூப மமலஜ்ஞாநாதிபிஷ் ஷட்குணை: ।
ஜுஷ்டம், ஸூரிஜநாதிபம் த்ருத ரதாங்காப்ஜம் ஸுபூஷோஜ்ஜ்வலம்
ஸ்ரீபூஸேவ்யமநந்த போகி நிலயம் ஸ்ரீவாஸுதேவம் பஜே ॥

2. ஆமோதே புவநே ப்ரமோத உத ஸம்மோதே ச ஸங்கர்ஷணம்
ப்ரத்யும்நம் ச ததாऽநிருத்தமத தாந் ஸ்ருஷ்டி ஸ்த்திதீ சாப்யயம் ।
குர்வாணாந் மதிமுக்யஷட்குண வரை: யுக்தாந் த்ரியுக்மாத்மகை:
வ்யூஹாதிஷ்டித வாஸுதேவமபி தம் க்ஷீராப்தி நாதம் பஜே ॥

3. வேதாந்வேஷண மந்தராத்ரி பரண க்ஷ்மோத்தாரண ஸ்வாச்ரித-
ப்ரஹ்லாதாவந பூமிபிக்ஷண ஜகத் விக்ராந்தயோ யத்க்ரியா: ।

துஷ்ட க்ஷத்ர நிபர்ஹணம் தசமுகாத்யுந் மூலநம் கர்ஷணம்
காலிந்த்யா:, அதிபாப கம்ஸ நிதநம் யத்க்ரீடிதம் தம் நும: ||

4. யோ தேவாதிச துர்விதேஷ்ட ஜகிஷு ப்ரஹ்மாண்ட கோசாந்தரே
ஸம் பக்தேஷு சராசரேஷு நிவஸந்நாஸ்தே ஸதாந்தர் பஹி: |
விஷ்ணும் தம் நிகிலேஷ்வணுஷ்வணுதரம் பூயஸ்ஸு பூயஸ்தரம்
ஸ்வாங்குஷ்டப்ரமிதம் ச யோகிஹ்ருதயேஷ்வாஸீநமீசம் பஜே ||

5. ஸ்ரீரங்க ஸ்த்தல வேங்கடாத்ரி கரிகிர்யாதௌ சதேஷ்டோத்தரே
ஸ்த்தாநே, க்ராம நிகேதநேஷு ச ஸதா ஸாந்நித்ய மாஸேதுஷே |
அர்ச்சா ரூபிண மர்ச்சகாபிமதித: ஸ்வீகுர்வதே விக்ரஹம்
பூஜாம் சாகில வாஞ்சிதாந் விதரதே ஸ்ரீசாய தஸ்மை நம: ||

6. ப்ராதர் விஷ்ணோ: பரத்வாதி பஞ்சக ஸ்துதி முத்தமாம் |
படந் ப்ராப்நோதி, பகவத் பக்திம் வரதநிர்மிதாம் ||

# விஷயஸூசிகை

## பரத்வாதி பஞ்சகம் இடைப்பகுதி
## இரண்டாம் பாகம்

பக்கம்



SRI PADMAVATHI AMMAVARU



SRI VENKATESWARA SWAMIVARU

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அருளிச்செயல் அநுபவம்

# பரத்வாதி பஞ்சகம்

(விபவம் தொடர்ச்சி......)

## ஸ்ரீ ராமாவதாரம்

தழும்பிருந்த சார்ங்கநாண் தோய்ந்த. பெரி. 23

சார்ங்கபாணியல்லையே. தி. ச. வி. 15

குரங்கையாளுகந்த வெந்தை. தி. ச. வி. 21

கொங்குமலி கருங்குழலாள் கௌசலைதன் குலமதலாய்
தங்கு பெரும் புகழ்ச் சனகன் திருமருகா தாசரதீ. குல. 8. 3

தயரதன் தன் மாமதலாய் மைதிலி தன்மணவாளா குல. 8. 4

சிலைவலவா - சேவகனே - சீராமா குல. 8. 8

ஏவரிவெஞ்சிலைவலவா இராகவனே குல. 8. 10

எல்லையில் சீர்த்தயரதன்தன் மகனாய்த்
தோன்றிற்று. குல. 10. 11

கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண்முடியன்...
இராமன். பெரி. 4. 1. 1

நாந்தகஞ்சங்கு தண்டு நாணொலிச்சார்ங்கத் திருச்சக்கரம்

ஏந்து பெருமை யிராமனேயிருக்குமிடம் நாடுதிரேல
பெரி. 4. 1,2

மன்னுடைய விபீடணற்கா
மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்கண் வைத்த
என்னுடைய திருவரங்கற்கன்றியும்
மற்றொருவர்க்காளாவரே — பெரி. 4. 9. 2

கண்ணகாணில் ஓவாத்தொழிற்சார்ங்கன்
தொல்சீரை நன்னெஞ்சே ஓவாதவூணாகவுண் — பெ. தி. 78

நீள்கடல் சூழிலங்கைக்கோன் தோள்கள் தலை துணி
செய்தான்
தாள்கள் தலையில் வணங்கி — நம். 1. 6. 7

தொழுமினவனைத் தொழுதால் வழிநின்றவல்வினை
மாள்வித்து அழிவின்றியாக்கந்தருமே — ,, 1. 6. 8

தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன்
தஞ்சமாகவே — ,, 3. 6. 8

காயும் கடுஞ்சிலை என் காகுத்தன் வாரானால் — ,, 5. 4. 3

நின்றவாறு மிருந்தவாறும் கிடந்தவாறும் நினைப்பரியன
(க்ருஷ்ணாவதாரத்திலும் காணலாம்) — நம். 5. 10. 6

காண்பெருந்தோற்றத்து எம்காகுத்தநம்பிக்கு — ,, 6. 6. 9

உலகத்தையலைக்கும் அசுரர்வாணாள் மேல்
தீவாய்வாளி மழை பொழிந்த சிலையா திருமாமகள் கேள்வா
தேவா — ,, 6. 10. 4

திணரார் சார்ங்கத்துனபாதம்
சேர்வதடியேனெந்நாளே — ,, 6. 10. 5

காகுத்தா-கண்ணனே — ,, 7. 2. 3

கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ — ,, 7. 5. 1

என்னாருயிர்க்காகுத்தன்
கூட்டுண்டு நீங்கினான் — ,, 9. 5. 6

மைவண்ணநறுங்குஞ்சிக் குழல்பின் தாழ
இங்கே இருவராய் வந்தாரென்முன்னே நின்றார்
தி. நெ. தா. 21

சிலையாளா கலி. 3. 6. 9

ஏதவன் தொல்பிறப்பு இளையவன் வளைஊதி 3. 7. 4

வன்துணை வானவர்க்காய் வரம் செற்று 3. 7. 6

தாசரதியாய தடமார்வன் 8. 4. 7

வாளரக்கர் காலன் 8. 4. 8

வையமெல்லாமுடன் வணங்க வணங்கா மன்னனாய்த்
தோன்றி

வெய்யசீற்றக்கடியிலங்கை குடி கொண்டோட
வெஞ்சமத்துச் செய்த வெம்போர் நம்பரனை 8. 8. 7

தெய்வச்சிலையாற்கு என்சிந்தை நோய் செப்புமினே 9. 4. 3

இராக்கதர்வாழ் இலங்கை பாழாளாகப்படை
பொருதானுக்குப் பல்லாண்டு கூறுதுமே தி. ப. 3

"இராவணன் தலைபத்து என எம்பெருமான்
பிரம்மாவுக்குக் காட்டிக்கொடுத்தது".

ஆமே - பொ. 45

ஆய்ந்த - பே. 77

கொண்டு - நான். தி. 44

## தாடகைவதம்

திண்டிறளாள் தாடகைதன் உரமுருவுச்சிலைவளைத்தாய
குல. 8. 2

வந்தெதிர்ந்த தாடகை தன்னுரத்தைக்கீறி 10. 2

முன்வில் வலித்து முதுபெண்ணுயிருண்டான்
தன்வில்லின் வன்மையைப் பாடிப்பற பெரி. 3. 9. 2

வாய்த்த மலைபோலும் தன்னிகரொன்றில்லாத
தாடகையை

மாமுனிக்காத் தென்னுலக மேற்றுவித்த திண்டிறலும்
பெ. தி. ம

வல்லாளரக்கர்குலப் பாவை வாட கலி. 3. 6. 3

கடுசரமடு சிலைத்துரந்து நீர்மையிலாத தாடகை மாள
நினைந்தவர். கலி. 9. 8. 4

## விசுவாமித்ரர் வேள்வி காத்தல்

மாமுனி வேள்வியைக் காத்து தி. ப. எ. 4

மந்திரங்கொள் மறைமுனிவன் வேள்விகாத்து குல. 10. 2

முனிவன் வேள்வியை
கல்விச்சிலையால் காத்தான் கலி. 8. 6. 3

## ஸுபாஹுவதம்

வல்லரக்கருயிருண்ட மைந்தன் குல. 10. 2

## ஸீதாவிவாஹம்

சிலையொன்றிறுத்தாய் பெரி. 2. 3. 7

செறிந்தமணி முடிச்சனகன் சிலையிறுத்து
நினைக்கொணர்ந்தது. ,, 3. 10. 1

காந்தள்முகிழ் விரற் சீதைக்காகிக் கடுஞ்சிலை சென்றிறுக்க
வேந்தர் தலைவன் சனகராசன் தன் வேள்வியிற்
கண்டாருளர் ,, 4. 1. 2

சிற்றவைசிங்கமே சீதைமணாளா பெரி. 3. 3. 5

சீதைவாயமுதமுண்டாய் நாச். தி. 2. 10

வேய்போலுமெழில் தோளி தன்பொருட்டா
விடையோன் தன் வில்லைச்செற்றாய். குல. 9. 4

செவ்வரிநற் கரு நெடுங்கண் சீதைக்காகிச்
சினவிடையோன் சிலையிறுத்து 10. 3

வில்லிறுத்து மெல்லியல் தோள் தோய்ந்தாயென்றும்
தி. நெ. தா. 13

விரைகமழ்ந்த மென்கருங்குழற்காரணம் வில்லிறுத்து
கலி. 3. 1. 8

வாராருமிளங்கொங்கை மைதிலியை மணம் புணர்வான்
காரார்திண் சிலேயிறுத்த தனிக்காளை கருதுமிடம். கலி.4.1.8

உடஞ்சிய வில்லென்ன வல்லேயதனை
இறுத்திட்டவளின்பமன்போடணைந்திட்டு கலி. 10. 6. 8

"கூனிகூனெகிமிர்த்தல்"

கூனகம் புகத் தெறிந்த சொற்றவில்லியல்பேயே.

தி. ச. வி. 30

கொண்டை கொண்ட கோதை மீது தேனுலாவு கூனிகூன்
உண்டை கொண்டரங்க வோட்டி உள்மகிழ்ந்த காதனூர்.
தி. ச. வி. 49

ஒருகால் நின்று உண்டை கொண்டோட்டி வன்கூன் நிமிர
நினைந்தபெருமான். கலி. 10. 6. 2

கூனேசிதைய வுண்டைவில் நிறத்தில் தெறித்தாய்
கோவிந்தா. நம். 1, 5. 5

வனம்புகுதல்

பின்னின்று தாயிரப்பக்கேளான்
சொல்நின்ற தோள் நலந்தான் நேரில்லாத்தோன்றல் பூ. 79

பாராளும் படர்செல்வம் பரத நம்பிக்கேயருளி
ஆராவன்பிளையனொடு அருங்கான மடைந்தவனே குல. 8. 5

சுற்றமெல்லாம் பின் தொடரத்
தொல்கானமடைந்தவனே ,, 8. 6

சிற்றவைதன் சொற்கொண்ட சீராமா குல. 8. 6

வன் தாளினிணை வணங்கி வளநகரம் தொழுதேத்தமன்னனு
வான்

நின்றவை அரியணைமேலிருந்தாயை நெடுங்கானம்
படரப்போகு

என்றாள் எம்பிராமாவோ உனைப்பயந்த கைகேசி தன்
சொற்கேட்டு நன்றாக நானிலத்தையாள்வித்தேன்
நன்மகனேயுன்னை நானே குல. 9. 1

நேரிழையுமிளங்கோவும் பின்புபோக எவ்வாறு நடந்தனை
யெம்மிராமாவோ குல. 9. 2

மெல்லணைமேல் முன்துயின்றாயினிப்போய்வியன் கான
மரத்தின் நீழல்
கல்லணைமேல் கண்துயிலக்கற்றனையோ குல. 9. 3

காகுத்தாகரியகோவே
வாபோகுவா இன்னம் வந்தொருகால் கண்டுபோ மலராள்
கூந்தல்
வேய்போலு மெழில் தோளி தன்பொருட்டா விடையோன்
தன் வில்லைச்செற்றாய் குல. 9.4

இன்று பெரும்பாவியேன் மகனே போகின்றாய் கேகயர்
கோன்
மகளாய்ப்பெற்ற அரும்பாவிசொற்கேட்ட வருவினையேன்
என் செய்கேனந்தோ யானே குல. 9. 5

அம்மாவென்றுகந்தழைக்கும் ஆர்வச்சொல் கேளாதேயணி
சேர்மார்வம்
என்மார்வத்திடையழுந்தத்தழுவாதே முழுசாதே
மோவாதுச்சி
கைம்மாவின் நடையன்ன மென்னடையும் கமலம் போல்
முகமும் காணாது
எம்மானை யென்மகனை யிழந்திட்ட
இழிதகையேனிருக்கின்றேனே குல. 9. 6

பூமருவு நறுங்குஞ்சி புன்சடையாப்புனைந்து பூந்துகில்
சேரல்குல்
காமரெழில் விழலுடுத்துக்கலனணியாது அங்கங்களழகு
மாறி
ஏமரு தோளென் புதல்வன் யானின்று செலத்தக்க
வனந்தான் சேர்தல்
தூமறையீரிது தகவோ சுமந்திரனே வசிட்டனே சொல்லீர்
நீரே குல. 9. 7

பொன்பெற்ரு ரெழில் வேதப் புதல்வனையும் தம்பியையும்
பூவைபோலும்
மின்பற்ரு நுண்மருங்குல் மெல்லியலென்மருகியையும்
வனத்திற்போக்கி
நின்பற்ரு நின்மகன்மேல் பழி விளேத்திட்டு என்னேயும்
நீள்வானில் போக்க
என்பெற்ருய் கைகேசி இருநிலத்தினிதாக
விருக்கின்ருயே குல. 9. 8

முன்னெருநாள் மழுவாளி சிலேவாங்கி அவன் தவத்தை
முற்றும் செற்ருய் உன்னேயு முன்னருமையுமுன் மோயின்
வருத்தமும் ஒன்ருகக் கொள்ளாது
என்னேயுமென்மெய்யுரையும் மெய்யாகக் கொண்டு வனம்
புக்கவெந்தாய் நின்னேயே மகஞகபெறப் பெறுவேன்
ஏழ்பிறப்பும் நெடுந்தோள் வேந்தே. குல. 9. 9

தேனகு மா மலர்க்கூந்தல் கௌசலேயும் சுமித்திரையுஞ்
சிந்தை நோவ கூனுருவின் கொடுங் கொழுத்தை சொற்கேட்ட
கொடியவள்தன் சொற்கொண்டு
இன்று கானகமே மிகவிரும்பி நீ துறந்த வளநகரைத்துறந்து
நானும் வானகமே மிகவிரும்பிப் போகின்றேன்
மனுகுலத்தார் தங்கள் கோவே. ,, 9. 10

ஏரார்ந்த கருநெடுமாலிராமனுய் வனம் புக்க அதனுக்காற்ருத்
தாரார்ந்த தடவரைத்தோள் தயரதன் தான் புலம்பிய
அப்புலம்பல் தன்னே
கூரார்ந்த வேல் வலவன் கோழியர்கோன்
குடைக்குலசேகரன் சொற்செய்த
சீரார்ந்ததமிழ்மாலே யிவை வல்லார் தீ நெறிக்கண்
செல்லார்தாமே. ,, 9. 11

தொத்தலர் பூஞ்சுரிகுழல் க்கைகேசி சொல்லால்
தொன்னகரம் துறந்து துறைக்கங்கை தன்னே...
வனம் போய்ப்புக்கு குல. ,, 10. 4

கொங்கைவன் கூனிசொற்கொண்டு குவலயத்துங்கக்
கரியும் பரியுமிராச்சியமும்
எங்கும்பரதற்கருளி வன்கானடை பெரி. 2. 1. 8

மாற்றுத்தாய் சென்று வனம்போகேயென்றிட
ஈற்றுத்தாய் பின்றொடர்ந்து எம்பிரானென்றழக்
கூற்றுத்தாய் சொல்லக் கொடிய வனம்போன
சீற்றமிலாதானைப்பாடிப்பற 3. 9. 4

தார்க்கிளந்தம்பிக்கு அரசீந்து தண்டகம் நூற்றவள் சொற்
கொண்டுபோகி 3. 9. 8

கலக்கியமாமனத்தனளாய்க் கைகேசி வரம்வேண்ட
மலக்கியமாமனத்தனனாய் மன்னவனும் மறாதொழிய
குலக்குமரா காடுறையப் போவென்று விடைகொடுப்ப
இலக்குமணன்றன்னொடும் அங்கேகியது 3. 10. 3

கூன்தொழுத்தை சிதகுரைப்பக் கொடியவள்வாய் கடிய
சொற்கேட்டு
ஈன்றெடுத்த தாயரையும் இராச்சியமுமாங்கொழிய
கான்தொடுத்த நெறிபோகிக் கண்டகரைக்களைந்தான். 4. 8. 4

போர்வேந்தன் தன்னுடைய தாதைபணியாலரசொழிந்து
பொன்னகரம் பின்னே புலம்ப வலங்கொண்டு
மின்னும் வளநாடு கைவிட்டு...
கொன்னவிலும் வெங்கானத்தூடு... மன்னனிராமன் பின்
வைதேவி...அன்ன நடைய வணங்கு நடந்திலளே. பெ.தி.ம
சிற்றவை பணியால் முடிதுறந்தானை கலி. 2. 3. 1

கூனுலாவிய மடந்தைதன் கொடுஞ்சொலின்
திறத்திளங்கொடியோடும்
கானுலாவிய கருமுகில் திருநிறத்தவன் ,, 3. 1. 6

தம்பியொடு தாமொருவர் தன் துணைவி காதல்துணையாக
முனநாள்
வெம்பியெரிகானக முலாவுமவர்தாம் இனிது மேவு
நகர்தான் ,, 5. 10. 6

வில்லேர் நுதல் வேல் நெடுங்கண்ணியும் நீயும்
கலலார் கடுங்கானம் திரிந்த களிறே. ,, 7. 1. 5

மானமருமென்னோக்கி வைதேவி யின் துணையாக்
கானமரும் கல்லதர் போய்க்காடுறைந்தான் ,, 11. 5. 1

## குகன் தோழமை

பக்தியுடைக் குகன் கடந்த வனம்போய்ப்புக்கு குல. 10. 4

கூரணிந்த வேல்வலவன் குகனோடுங் கங்கை தன்னில்
சீரணிந்த தோழமை கொண்டதும் ஓர் அடையாளம்
பெரி. 3. 10. 4

ஏழை யேதலன் கீழ்மகனென்னுதிரங்கி
மற்றவற்கின்னருள்சுரந்து - உகந்து தோழன்
நீயெனக்கிங்கொழி யென்றசொற்கள் கலி. 5. 8. 1

## பரதன் வருதல்

கானமரும் கல்லதர் போய்க்காடுறைந்த காலத்து
தேனமரும் பொழிற்சாரல் சித்திரகூடத்திருப்ப
பான்மொழியாய்! பரதநம்பி பணிந்ததுமோரடையாளம்
பெரி. 3. 10. 5

## பாதுகை அளித்தல்

பரதனுக்குப் பாதுகமுமரசுமீந்து குல. 10. 4

முடியொன்றி மூவுலகங்களுமாண்டு -
உன்னடியேற்கருளென்று அவன்பின் தொடர்ந்த
படியில் குணத்துப் பரதநம்பிக்கு
அன்றடிநிலை யீந்தானைப் பாடிப்பற பெரி. 3. 9 6

மரவடியைத் தம்பிக்கு வான்பணயம் வைத்துப்போய்
வானோர்வாழ. பெரி. 4. 9. 1

"பூமாலையினுல் ராமனைக் கட்டியது"

அல்லியம் பூமலர்க்கோதாய் - மல்லிகை மாலை கொண்டு
அங்கார்த்ததுமோரடையாளம் ,, 3. 10. 2

காகாசுரபங்கம்

பொற்றிகழ் சித்திரகூடப் பொருப்பினில்
உற்றவடிவில் ஒரு கண்ணுங் கொண்ட அக்காகத்தைக்
குழலன் பெரி. 2. 6. 7

சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட
அத்திரமே கொண்டெறிய அனைத்துலகுந்திரிந்தோடி
வித்தகனே யிராமாவோ நின்னபயமென்றழைப்ப
அத்திரமே யதன் கண்ணை அறுத்தது மோரடையாளம்
3. 10. 6

விராதவதம்

வலிவணக்கு வரை நெடுந்தோள் விராதைக் கொன்று
வண்தமிழ் மாமுனி கொடுத்த வரிவில் வாங்கி குல. 10. 5

தின்கை வெங்கண் விறல் விராதனுக விற்குனித்த
விண்ணவர்கோன் கலி. 3. 4. 6

சூர்ப்பணகாபங்கம்

கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கி குல. 10. 5

கன்னவரக்கியை மூக்கொடு பெரி. 2. 7. 5

சூர்ப்பணகாவைச் செவியோடு மூக்கு
அவள் ஆர்க்க வரிந்தவனை பாடிப்பற ,, 3. 8. 8

துங்கை பொல்லாத மூக்கும் போக்குவித்தான் ,, 4. 2. 2

தங்கையை மூக்கும் தமையனைத்தலையும் தடித்த
எம் தாசரதி. பெரி. 4. 7. 1

கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார்
சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே
நாச். தி. 10. 4

அன்று திருச் செய்ய நேமியான் தீயரக்கி மூக்கும்
பருச் செவியு மீர்ந்தபரன் பெ. தி. 63

தன் சீதைக்கு நேராவனென்றோர் நிசாசரிதான் வந்தாளைக்
கூரார்ந்தவாளால் கொடி மூக்கும் காதிரண்டும் ஈரா விடுத்து
சி. தி. ம

அரக்கர் குலப்பாவை... ராவணன்றன் நல் தங்கை...
பொன்னிறங் கொண்டு புலர்ந்தெழுந்தகாமத்தால்
தன்னை நயந்தாளைத்தான் முனிந்து மூக்கரிந்து—மன்னிய
திண்ணெனவும் பெ. தி. ம

அரக்கியை மூக்கீர்ந்தாயை அடியேனடைந்தேன். நம். 2. 3. 6

அடுத்தார்த்தெழுந்தாள் பிலவாய் விட்டலற
அவள் மூக்கயில் வாளால் விடுத்தான் கலி. 1. 5. 5

அரக்கர் குலப்பாவை தன்னை வெஞ்சின மூக்கரிந்த
விறலோன் 3. 7. 3

கலையிலங்குமகலல்குலரக்கர் குலக் கொடியைக்
காதொடு மூக்குடனரியக் கதறியவளோடி—தலையில்
அங்கை வைத்து மலையிலங்கை புகச் செய்த தடந்தோளன்
3. 9. 4

கருமகளிலங்கையாட்டி பிலங்கொள் வாய் திறந்து
தன் மேல் வருமவள் செவியும் மூக்கும்வாளினால்
தடிந்த வெந்தை கலி, 4. 5. 5

மீதோடி வாளெயிறு மின்னிலக
முன்விலகு முருவினளை-காதோடு கொடிமூக்கன்றுடன்
அறுத்த கைத்தலத்தா கலி. 7. 4. 3

மலைபோலுருவத்தொரிராக்கதி மூக்கு
அரிந்திட்டவன் காண்மின் ,, 10. 6. 9

## கரதூஷணதிவதம்

கடுங்கவந்தன் வக்கரன் கரன் முரன்
சிரமவை இடந்து கூறுசெய்த பல்படைத் தடக்கைமாயனே
தி. ச. வி. 104

கரனொடுதூடணன் தன்னுயிரை வாங்கி குல. 10. 5

கூடலர் சேனை பொருதழிய பெரி. 4. 1. 3

அவட்கு மூத்தோனை வெந்நரகம் சேரா வகையே
சிலைகுனித்தான் சி. ம. தி

புகழும் பொருபடையேந்திப்போர்புக்க சுரரைப்
பொன்றுவித்தான் நம். 8. 9. 3

கறைவளர்வேல்கரன் முதலா-கணையொன்றினால மடிய
கலி. 2. 10. 5

அன்று நேர்ந்த நிசாசரரைக் கவர்ந்த வெங்கணைக்
காகுத்தன்— அமலனாதி-2

## மாரீசவதம்

மேலொருநாள் மான்மாயவெய்தான்வரை பெ. 82

அன்று பிரிந்தது சீதையைமான்பின்போய் பூ. 15

எய்தானம்மான் மறியை ஏந்திழைக்காய் மூ.பெ. 52

சிலைவணக்கி மான்மரியவெய்தான் குல. 10. 5

பொன்னொத்தமானொன்று புகுந்தினிது விளையாட
நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்தெம் பிரானேகப்
பின்னேயங்கிலக்குமணன் பிரிந்தது மோரடையாளம்
பெரி. 3. 10. 7

கரந்துருவின் அம்மானை யங்கான்று பின் தொடர்ந்த
ஆழியங்கை அம்மானை யேத்தாதயர்த்து
வராளா இருந்தொழிந்தேன் கீழ் நாள்களெல்லாம் பெ. தி. 82

மாயமான்மாயச் செற்று தி. சூ. தா. 16
கானிடையுருவைச் சுடுசரம் துரந்து கண்டு கலி. 1. 4. 2

மான்முனிந்தொரு கால் வரிசிலை வளைத்த „ 1. 4. 8

கிளர்பொறிய மறி திரிய வதனின் பின்னே
படர்ந்தானை „ 2. 5. 6

துள்ளா வருமான் வீழ வாளிதுரந்தான் „ 6. 7. 3

கலை மாச்சிலையாலெய்தானூர் „ 8. 6. 7

இலைமலி பள்ளியெய்தி யிது மாயமென்ன
இனமாய மான்பின்னெழில் சேர்
அலைமலி வேற்கணாளை யகல்விப்பதற்கு
ஒருரு வாயமானையமையா „ 11. 4. 7

## பிராட்டி பிரிவு

தனமருவுவைதேகி பிரியலுற்றுத் தளர்வெய்தி குல. 10. 6

தண்டகாரணியம் புகுந்தன்று தையலைத் தகவிலி
யெங்கோமான் கொண்டு போந்து-கெட்டான் கலி. 10. 2. 3

செம்பொன் நீண்முடியெங்களிராவணன்
சீதையென்பதோர் தெய்வம் கொணர்ந்து. 10 2, 5

## ஜடாயு மோக்ஷம்

சடாயுவை வைகுந்தத்தேற்றி — குல. 10. 6

## கபந்தன்வதம்

கடுங் கவந்தன் வக்கரன் கரன்முரன்சிரமவை
இடந்துகூறு செய்த — தி. ச. வி. 104

கறைவளர் வேல்கரன் முதலாக்கவந்தன்-கணையொன்றினும்
கலி 2. 105

படர்வனத்துக் கவந்தனொடும்...உகவிற்குனித்த — 3. 4. 6

## ஸீதை சிறை வாஸம்

தளிர் நிறத்தால் குறைவில்லாத் தனிச் சிறையில் விளப்
புற்ற
கிளிமொழியாள் — நம். 4. 8. 5

வம்புலாங் கடிகாவிற்சிறையா வைத்ததே குற்றமாயிற்றுக்
காணீர் — கலி. 10. 2. 5

புனங்கொள் மென் மயிலைச் சிறை வைத்த — 10. 2. 8

## ஹநுமான் தோழமை

வாதமாமகன் மற்கடம் விலங்கு மற்றோர் சாதியென்றொழிந்
திலை...
கோதில் வாய்மையினாயொடுமுடனே
உண்பன் நானென்ற வொண் பொருள் — கலி. 5. 8. 2

## சுக்ரீவ ஸக்யம், மராமரமேழெய்தது

சிலையால் மராமரமேழ் செற்று — பொ. 27

எய்தான் மராமரமேழுமிராமனாய் — பே. 52

மரம் பொதச் சரந் துரந்து — தி.ச.வி. 79

கடைந்து மிடைந்தவேழ்மரங்களும் அடங்கவெய்து
உடைந்தவாலி தந்தனுக்கு உதவ வந்திராமனுய் தி.ச.வி. 81

சுடர்வாளியால் நீடுமாமரம் செற்றதும் குல. 2. 2

வனமருவு கவியரசன் காதல் கொண்டு 10. 6

நின்ற மராமரஞ் சாய்த்தாய் பெரி. 2. 4. 2

சிலையால்மராமரமெய்த தேவனைச்சிக்கென நாடுதிரேல்
4. 1. 3

மரமேழன்று எய்தானை பெ. தி. 64

சினையேய் தழைய மராமரங்களேழுமெய்தாய் சிரீதரா
நம். 1. 5. 9

மராமரமெய்த மாயவன் 1. 7. 6

தேம்பணையசோலை மராமரமேழெய்ததுவும் 2. 5. 7

மராமரம் பைந்தாளேழுருவ ஒருவாளி கோத்தவில்லா 2. 6. 9

புணராநின்ற மரமேழ் அன்றெய்த வொருவில்வலவாவோ
நம். 6. 10. 5

கணையொன்றாலேயேழ் மரமுமெய்த எங்கார் முகிலே
,, 9. 1. 2

மராமரமேழுமெய்த வலத்திறன் கலி. 1. 8. 5

மரமெய்த மாமுனிவா ,, 3. 5. 5

மரமெய்த திறலளா ,, 3. 6. 9

மராமரமேழெய்த வென்றிச் சிலையாளன் ,, 5. 5. 2

மரமேழெய்த மைந்தனை கலி. 7. 3 1

ஏழு மாமரம் துளைபடச் சிலை வளைத்து ,, 8. 5. 5

வரிந்திட்ட வில்லால் மரமேழு மெய்து ,, 10. 6. 9

பொருந்து மராமரமேழு மெய்த புனிதனூர் ,, 11. 2. 4

## வாலிவதம்

இது விலங்கு வாலியை வீழ்த்தது நான். தி. 28

கழிசினத்த வல்லாளன் வானரக் கோன் வாலி மதனழித்த வில்லாளன் ,, 85

வாலி வீழ முன்னோர் நாள் தி.ச.வி. 73

வெந்தவர்க்கும் வந்துனை எய்தலாகுமென்பர். தி.ச.வி. 111

வாலியைக் கொன்றரசு இளைய வானரத்துக் களித்தவனே குல. 8. 7

வாலியைக் கொன்று 10. 6

வாலிமாவலத்தொருவன துடல் கெட
வரிசிலை வளைவித்து அன்று ஏலுமாறு
தண்தடம் பொழிலிடம் பெற இருந்தநல்லிமயத்துள்
கலி. 1. 2. 1

முன் கொடுந்தொழிலுரவோன்
ஊனுடை யகலத்தடுகணை குளிப்ப
உயிர்கவர்ந்துகந்த வெம்மொருவன் 1. 4. 2

கறைவளர்வேல்கரன் வாலி கணையொன்றினால்.
மடிய 2. 10. 5

பைங்கண்விறல் செம்முகத்து வாலி மாள 3. 4. 6

உருத்தெழு வாலிமார்பில் ஒரு கணையுருவவோட்டி
கருத்துடைத்தம்பிக்கு
இன்பக்கதிர் முடியரசளித்தாய் கலி. 4. 6. 3

பெருந்தகைக் கிரங்கி
வாலியை முனிந்த பெருமை கொலோ ,, 10. 9. 8

## அங்குளீய ப்ரதானம்

ஒத்த புகழ் வானரக்கோன் உடனிருந்து நினைத்தேட
அத்தகுசீர் அயோத்தியர்கோன் அடையாளமிவை
மொழிந்தான் இத்தகையாலடையாளம்
ஈதவன் கைமோதிரமே பெரி. 3. 10. 8

## அசோகவனபங்கம்

உயர் கொள் மாக்கடிகாவை யிறுத்து கலி.10. 2. 6

## ஸமுத்ரசரணாகதி

கிடந்து கம். 2, 8. 7

கிடந்து ,, 4. 5. 10

கிடந்தவாறும் ,, 5. 10. 6

## கடலரசனிடம் பெருமாள் சீற்றம்

வேலைவேவ வில்வளைத்த வெஞ்சினத்த வீர தி. ச. வி. 31

வெண்டிரைக் கருங்கடல் சிவந்து வேவ ,, 50

பரந்திட்டு நின்ற படுகடல் தன்னை...
கரந்திட்டு நின்ற கடலைக்கலங்க
சரந்தொட்ட கைகளால் சப்பாணி பெரி. 1. 6. 7

முரியும் வெண்டிரை முதுகயம் தீப்பட
முழங்கழ லெரியம்பின் வரிகொள் வெஞ்சிலை
வளைவித்த் செமந்தனும் பத்திலன் கலி. 8. 5. 6

மல்லைமுந்நீரதர்பட வரிவெஞ்சிலை கால்வளைவித்து
கொல்லை விலங்கு பணிசெய்யக்
கொடியோனிலங்கை புகலுற்று கலி. 8. 6. 4

## ஸேது பந்தனம்

அன்றதடைத்துடைத்துக் கண்படுத்தவாழி பொ. 2

பின்னடைத்தாய் மாகடலை பூ. 30

இது விலங்கையீடழியக்கட்டிய சேது நான். தி. 28

தடங்கடலைக்கற் கொண்டு தூர்த்தகடல் வண்ணன் ,, 77

படைத்த பொளவநீர் அடைத்து தி. ச. வி. 29

குரக்கினப்படைகொடு குரைகடலின் மீதுபோய் ,, 32

வெற்பெடுத்து வேலை நீர் வரம்புகட்டி ,, 39

படைத்தடைத்ததிற்கிடந்து ,, 92

துன்னுநீர்வரம்பு செய்த ,, 102

ஒருவில்லாலோங்குமுந்நீர் அடைத்து திருமாலை. 11

குரங்குகள் மலையை நூக்கக் குளித்துத்
தாம்புரண்டிட்டோடி
தரங்கநீரடைக்கலுற்ற சலமிலாவணிலும் போலேன் ,, 27

மலையதனாலணை கட்டி குல. 8

குரைகடலையடலம்பால் மறுகவெய்து
குலைகட்டி மறுகரையை யதனாலேறி ,, 10. 7

குரக்கினத்தாலே குரைகடல் தன்னை
நெருக்கியணைகட்டி பெரி. தி. 1. 6. 8

தலையால் குரக்கினம் தாங்கிச் சென்று
தடவரை கொண்டடைப்ப ,, 4. 1. 3

சேதுபந்தனம் திருத்தினாய் எங்கள் சிற்றில்வந்து
சிதையேலே நாச். தி. 2. 7

வண்ணம் போலன்ன கடலை மலையிட்டணைகட்டி பெ. தி. ம

கிடந்து நம். 2. 8. 7

உண்டும்...கிடந்தும் ,, 4. 5. 10

பெரியநீர் படைத்து...அடைத்து ,, 8. 1. 5

அலைகடலைக் கடைந்தடைத்த தி நெ. தா. 29

கலங்கமாக்கடல் அரிகுலம் பணிசெய்ய
அருவரை யணைகட்டி கலி. 1. 2. 2

மலை கொண்டு அலைநீர் அணைகட்டி ,, 1. 5. 1

மாலுங் கடலார மலைக்கு வடிட்டணைகட்டி...
கோலமதிளாய இலங்கை கெட ,, 2. 4. 5

குடைத்திறல்மன்னவனுமொருகால்
குரங்கைப்படையா
மலையால் கடலை யடைத்தவனெந்தைபிரான் ,, 2. 9. 8

செய்வாயழலம்பு துரந்து முந்நீர் துணியப்பணி
கொண்டு ,, 3. 2. 6

கம்பமாகடலடைத்து ,, 4. 2. 1

மல்லை மாமுந்நீரதர்பட மலையாலணை செய்து
மகிழ்ந்தவனா ,, 4. 2. 6

கல்லால் கடலை அணைகட்டி யுகந்தாய் ,, 4 7. 6

அலைகடலடைத்திட்டு ,, 4. 10. 2

இலங்கை பாழ்படுப்பதற்கெண்ணி
வரிசிலை வளைய வடு சரந்துரந்து மறிகடலநெறிபட
மலையால் அரிகுலம் பணிகொண்டலை
கடலடைத்தான் ,, 5. 7. 7

விலங்கலால் கடலடைத்து விளங்கிழை
பொருட்டு ,, 5. 9. 6

வாளரக்கன் நகர்பாழ்படச்சூழ்கடல் சிறைவைத்து கலி. 7.3.9

கலங்கமாக்கடல் கடைந்தடைத்து ,, 8. 5. 7

கொல்லை விலங்கு பணி செய்யக்
கொடியோனிலங்கை புகலுற்று
தொல்லை மரங்கள் புகப்பெய்து துவலைமீர்ந்து
வானணவக் கல்லாற் கடலையடைத்தானூர் ,, 8. 6. 4

விலங்கலுறப் படையாலாழிதட்ட ,, 8. 9. 3

ஓதமாகடலைக் கடந்தேறி ,, 10. 2. 6

தாழமின்றி முந்நீரை யஞ்ஞான்று
தகைந்ததேகண்டு ,, 10. 2. 7

கல்லின் முந்நீர் மாற்றி வந்துகாவல் கடந்து ,, 10. 3. 6

தெளியாவரக்கர் திறல் போயவிய
மிடைத்திட்டெழுந்த குரங்கைப்படையா
விலங்கல் புகப் பாய்ச்சிவிம்ம - கடலை
அடைந்திட்டவன் காண்மின் ,, 10. 6. 7

தூங்காத முந்நீர் செறித்திட்டு ,, 10. 6. 8

## விபீஷணன் உபதேசம்

நஞ்சு தானரக்கர் குடிக்கென்று
நங்கையை யவன் தம்பியே சொன்னான் கலி. 10. 2. 4

## இலங்கைபாழ்செய்தது

தென்னிலங்கை நீருக வெய்தழித்தாய் நீ பூ. 29

இலங்காபுரமெரித்தானெய்து பே. 51

குலைகொண்ட ஈரைந் தலையான்
இலங்கையையீடழித்த கூரம்பன் நான். தி. 8

கல்லாதவரிலங்கைகட்டழித்த காகுத்தனல்லால்
ஒரு தெய்வம் யானிலேன் ,, 53

வெற்பெடுத்த விஞ்சிசூழ் இலங்கை கட்டழித்தநீ

திரு. ச. வி. 39

இலைத்தலைச்சரந்துரந்து இலங்கைகட்டழித்தவன் ,, 54

இரும்பரங்கவெஞ்சரந்துரந்த வில்விராமனே ,, 93

பண்ணுலாவு...

எண்ணிலாவரக்கரை நெருப்பினால் நெருக்கினாய் ,, 91

சிலையினாலிலங்கை செற்றதேவனே தேவனாவான். திருமாலை. 7

இலங்கையர் குலத்தை

வாட்டியவரிசிலை வானவரேறே திரு. ப. எ. 4

அன்று நேர்ந்த நிசாசரரைக்

கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் அமலனாதி. 2

வளையவொருசிலையதனால

மதிளிலங்கையழித்தவனே குல. 8. 9

இலங்கைநகரரக்கர் கோமான்

சினமடங்கமாருதியால சுடுவித்தானே ,, 10. 6

இலங்கைபாழாளாகப் படைபொருதானுக்கு திரு. ப. 3

இலங்கை அரக்கரவிய அடுகணையாலே

நெருக்கியகைகளாற சப்பாணி பெரி. 1. 6. 8

வலலாளிலங்கை மலங்கச சரந்துரந்த

விலலாளனை ,, 2. 1. 10

அடங்கச் சென்றிலங்கையையீடழித்த

அனுமன் புகழ்ப்பாடித்தங் குட்டன்களை ,, 3. 5. 7

களங்குழையாள் பொருட்டாக் கணை பாரித்து

அரக்கர்தங்கள் இனங் கழு வேற்றுவித்த

எழில்தோளெம் மிராமன் பெரி. 4. 3. 7

தென்னிலங்கைக் கோமானைச் செற்ற திருப்பாவை. 12

சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்
திறல் போற்றி திருப்பாவை 24

கடலையடைத்தரக்கர் குலங்களை
முற்றவுஞ் செற்று
இலங்கையைப் பூசலாக்கிய சேவகா நாச். தி. 2. 6

வில்லாலிலங்கையழித்தாய் ,, 3. 3

இரக்கமேலொன்றுமிலாதாய்
இலங்கையழித்த பிரானே ,, 3. 4

இலங்கைக்குழா நெடுமாடமிடித்த பிரானார்
கொடுமைகளே தி. வி. 36

தென்பாலிலங்கை வெங்களஞ்செய்த நம்
விண்ணோர் பிரானார் ,, 77

பேணலமில்லாவரக்கர் முந்நீரபெரும்பதிவாய்
நீணகர் நீளெரிவைத் தருளாயென்று
நின்னை விண்ணோர் தாணிலந்தோய்ந்து தொழுவர் ,, 92

மும்மதிளிலங்கை இருக்கால்வளைய
ஒருசிலை யொன்றிய ஈரெயிற்றழலவாய்
வாளியில் அட்டனை தி. எ. கூ

ஆராலிலங்கை பொடிபொடியா வீழ்ந்தது சி. தி. ம

தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினான் நம். 2. 1 3.

இரக்கமெழீர் இதற்கென் செய்கேன்
அரக்கனிலங்கை செற்றீருக்கே ,, 2. 4. 3

இலங்கை செற்றவனே என்னும்...
கைதொழும் கின்றிவளே ,, 2. 4. 4

கிளர் வாழ்வை வேவ இலங்கை செற்றீர் ,, 2. 4. 10

இலங்கை செற்றாய் ,, 2. 6. 9

இலங்கை யரக்கர் குலம் முருடு தீர்த்த பிரான் ௩ம். 2. 7. 10

ஏர் கொளிலங்கையை நீறே செய்த நெடுஞ்சுடர்ச்
சோதி „ 2. 9. 10

தேவதேவனைத் தென்னிலங்கை யெரியெழச்
செற்றவில்லியை „ 3. 6. 3

கொம்புபோல் சீதை பொருட்டு இலங்கை நகர்
அம்பெரியுய்த்தவர் „ 4. 2. 8

தனிச்சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள்
காரணமாக் கிளரரக்கன் நகரெரித்த „ 4. 8. 5

இலங்கை செற்றேனே யென்னும் „ 5. 6. 9

இலங்கை செற்ற வம்மானே „ 5. 7. 2

மாறில்போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த
ஏறு சேவகனுர்க்கு „ 6. 1. 10

மன்னுடையிலங்கை அரண்காய்ந்த மாயவனே „ 6. 2. 1

சூழ்கடல் தென்னிலங்கை செற்றபிரான் வந்து
வீற்றிருந்த „ 7. 3. 7

மாறு நிரைத்து இரைக்கும் சரங்கள்
இனநூறு பிணம் மலை போல் புரள
கடல் ஆறு மடுத்து உதிரப்புனலா
அப்பன் நீறுபட இலங்கை செற்ற நேரே „ 7. 4. 7

நாட்டை நலியுமரக்கரை நாடித்தடிந்திட்டு
நாட்டையளித்து „ 7. 5. 2

பெயர்களாயிரமுடைய வல்லரக்கர் புக்கழுந்தத்
தயரதன் பெற்ற மரதக மணித் தடத்தினையே „ 10. 1. 8

அசுரரையென்றும் துணிக்கும் வல்லரட்டன் „ 10. 1. 9

புகழ் நின்ற புள்ளூர்தி போரரக்கர் குலம்
கெடுத்தான் „ 10. 6. 9

கடிமதிளிலங்கை செற்ற ஏற்றினை திரு. குறு. தா. 2

முன் பொலா விராவணன் தன் முதுமதிளிலங்கை
வேவித்து ,, 15

தேராளும் வாளரக்கன் செல்வம் மாளத்
தென்னிலங்கை முன் மலங்கச் செந்தீயொல்கி தி.நெ. தா 20

இலங்கை மாநகர் பொடி செய்தவடிகள் தாம்
இருந்தநல்லிமயத்து கலி. 1. 2. 2

இலங்கையும் கடலு மடலருந் துப்பின் இருநிதிக்
கிறைவனும் அரக்கர் குலங்களும் கெட ,, 1. 4. 3

கடம் சூழ்கரியும் பரிமாவும் ஒலி மாந்தேருங்
காலாளும் உடன் சூழ்ந்தெழுந்த கடியிலங்கை
பொடியா வடிவாய்ச் சரம் துரந்தான் ,, 1. 5. 2

ஒரு காலிருகால் சிலைவளையத் தோராவரக்கர்
தேர் வெள்ளம் செற்றான் ,, 1. 5. 4

காசையாடை மூடியோடிக் காதல் செய்தானவனூர்
நாசமாக நம்பவல்ல நம்பிநம் பெருமான் ,, 2. 2. 1

அரக்கன் மன்னூர் தன்னை வாளியினால்
மாள முனிந்து ,, 2. 2. 3

விண்டாரை வென்றாவி விலங்குண்ண
மெல்லியலார் கொண்டாடுமல்லகலமழலேற
வெஞ்சமத்துக் கண்டாரை ,, 2. 6. 4

தடங்கடல் நுடங்கெயிலிலங்கை
வன்குடிமடங்க வாளமர் தொலைத்த வார்த்தை
கேட்டின்புறும்மயங்கும் ,, 2. 7. 6

இலங்கை தன்னுள் பிறையெயிற்று வாளரக்கர்
சேனையெல்லாம் பெருந்தகையோடுடன்
துணித்தவெம்மான் தன்னை ,, 2. 10. 5

எய்யச்சிதைந்ததிலங்கை  கலி. 3. 3. 6

இலங்கை பொடிசெய்த  ,, 3. 9. 5

கல்லின் மீதியன்ற கடிமதிளிலங்கை கலங்க
ஓர்வாளி தொட்டானை  ,, 4. 3. 6

இலங்கை வவ்விய இடும்பை கூரக்கடுங்கணை
துரந்தவெந்தை  ,, 4. 5. 2

மல்லைமுந்நீர் தட்டிலங்கை கட்டழித்த மாயன்  ,, 4. 8. 4

ஆழ்கடல் சூழிலங்கை செற்ற குரக்கரசன்
கோலவில்லி  ,, 4. 8. 5

அலைகடலடைத்திட்டு
அரக்கர்தஞ் சிரங்களை யுருட்டி  ,, 4. 10 2

கடலரக்கர் தம்சேனை கூற்றிடைச் செல்லக்
கொடுங்கணை துரந்த
கோலவில்லிராமன்தன் கோயில்  ,, 4. 10. 6

மேவாவரக்கர் தென்னிலங்கை வேந்தன்
வியச்சரந்துரந்து  ,, 5. 1. 3

விளைத்தவெம்போர் விறல்வாளரக்கன் நகர்பாழ்பட
வளைத்த வலவில் தடக்கையவனுக்கு இடம்  ,, 5. 4. 4

அன்றரக்கனூராழலாலுண்டானைக் கண்டார்
பின்காணுமே  ,, 5. 6. 5

இலங்கைமலங்க வன்றடு சரந்துரந்து  ,, 5. 7. 8

மல்லலஞ்சீர் மதிள் நீரிலங்கை யழித்தவில்லா  ,, 6. 2 6

தொன்னீரிலங்கை மலங்க விலங்கெரியூட்டினான் ,, 6. 4. 6

ஆனைப்புரவிதேரொடு காலாளணி கொண்ட
சேனைத்தொகையைச்சாடியிலங்கை செற்றனூர் ,, 6. 5. 3

எறிநீரரணழிய கடந்தநம்பி கடியாரிலங்கை  ,, 6. 10. 1

தென்னிலங்கை அடையா வரக்கர் வியப்பொருது
மேவி வெங்கூற்றம் நடையாவுன்னக்கண்டான் கலி.6.10.5

கானவெண்கும் குரங்கும் முசுவும் படையா
அடலரக்கர் மானமழித்து நின்ற
வென்றியம்மான் ,, 6. 10. 6

சினவில் செங்கணரக்கருயிர்மாளச்
செற்றவில்லியென்று ,, 7. 3 1

ஆழிசூழிலங்கை மலங்கச் சென்று
சரங்களாண்ட ,, 7. 3. 4

தோராளும் வாளரக்கன் தென்னிலங்கை
வெஞ்சமத்துப் பொன்றிவீழ
போராளுஞ் சிலையதனுல் பொருகணைகள்
போக்குவித்தாய் ,, 7. 4. 4

அடையார் தென்னிலங்கை யழித்தானே ,, 7. 6. 3

வாளரக்கர் காலன் ,, 8. 4. 6

இலங்கையை மலங்குவித்த ஆழியான் ,, 8. 5. 5

துளங்கரவரக்கர் துளங்க
முன்நின்றோர் நிமிரச்சிலை வளையச் சிறிதே
முனிந்த திருமார்பன் ,, 8. 6. 1

முன்திருந்தா வரக்கர் தென்னிலங்கை
செந்தீயுண்ணச் சிவந்தொரு நாள் ,, 8. 6. 6

விண்டவர்பட மதிளிலங்கை முன்னெரியெழக்
கண்டவர் ,, 8. 7. 5

சிலையிலுலிலங்கை தீயெழச் செற்ற
திருக்கண்ணங்குடியுள் நின்றானே ,, 9. 2. 10

வில்லாலிலங்கை மலங்கச் சரந்துரந்த வல்லாளன் ,, 9. 4. 5

செற்றவன் தென்னிலங்கை மலங்கத்தேவர்
பிரான் ,, 9. 5. 10

சிலையாலிலங்கை செற்றான் கலி. 9. 6. 10

கடியிலங்கை மலங்கவெரித்து ,, 10. 2. 6

அணியிலங்கை யழித்தவன் தன்னை ,, 10. 2. 10

இலங்கை அல்லல் செய்தானுங்கள் கோமான் ,, 10. 3. 6

இலங்கை ஒள்ளெரி மண்டியுண்ணப் பணித்த
வூக்கமதனை நினைந்தோ ,, 10. 9. 1

அரக்கரை வென்ற வில்லியார் வீரமேகொலோ ,, 11. 1. 1

சென்று வார்சிலை வளைத்திலங்கையை
வென்ற வில்லியார் வீரமேகொலோ ,, 11. 1. 6

பொருகடல் சூழ் தென்னிலங்கை வீடழித்த ,, 11. 3. 1

கொலைமலி யெய்து வித்த கொடியோனிலங்கை
பொடியாகவென்றியமருள்
சிலைமலி ஏசஞ்சரங்கள் செலவுய்த்த
நங்கள் திருமால் நமக்கோரரணே. ,, 11. 4. 7

கொடியோனிலங்கை பொடியாச் சிலைகெழு
செஞ்சரங்கள் செலவுய்த்த நங்கள்
திருமாலே ,, 11. 4. 10

## கும்ப கர்ணன் வதம்

மிகப்புருவம் ஒன்றுக் கொன்றோசனையான் வீழ
ஒருகணையால் அன்றிக்கொண்டெய்தானவன். நான். தி. 29

பண்டொருநாள் கூற்றத்தின் வாய் வீழ்ந்த
கும்பகரணனும் திருப்பாவை. 10

நம்பி அநுமா-சுக்கிரீவா- அங்கதனே-நளனே
கும்பகர்ணன் பட்டுப் போனான் கலி. 10. 3. 2

## ராவண யுத்தத்தில் மற்றப் பேர் வதம்

காதல் மக்களும் சுற்றமும் கொன்று
கடியிலங்கை மலங்க எரித்து ,, 10. 2. 6

## இந்திரஜித் வதம்

எம்பிரானே யென்னை யாள்வாய் என்றென் றலத்தாதே
அம்பின் வாய்ப்பட்டாற்றகில்லாது
இந்திர சித்தழிந்தான் கலி. 10. 3. 2

## இராவணவதம்

ஆறியவன்பிலடியார்தமார்வத்தால் கூறிய
குற்றமாக் கொள்ளல் நீ தேறி கேடியோயடியடை-
தற்கன்றே ஈரைந்து முடியான் படைத்தமுரண்? பொ. 35

நுடங்கிடையை முன்னிலங்கை வைத்தான்
முரணழிய முன்னொருநாள்
தன்வில் அங்கை வைத்தான் சரண் ,, 59

சென்றதிலங்கைமேல் செவ்வே தன் சீற்றத்தால்
கொன்றதிராவணனைக் கூறுங்கால் பூ. 25

தோளிரண்டெட்டேழும் மூன்றும் முடியனைத்தும்
தாளிரண்டும் வீழசரந்துரந்தான் ,, 43

தென்னிலங்கைக்கோன் வீழ பே. 52

இதுவிலங்கை தானொடுங்க வில்நுடங்கத்
தண்டாரிராவணனை ஊனொடுங்க
வெய்தானுகப்பு நான். தி. 28

குரக்கினப் படைகொடு குரைகடலின் மீதுபோய்
அரக்கரங்கரங்க வெஞ்சரந்துரந்தவாதி நீ தி. ச. வி. 32

மின்னிறத் தெயிற்றரக்கன் வீழ வெஞ்சரந்துரந்து ,, 33

சரங்களைத்துரந்து வில்வளைத்திலங்கை
மன்னவன் சிரங்கள் பத்தறுத்துதிர்த்த செல்வர் ,, 51

இலங்கை மன்னன் ஐந்தொடைந்து பைந்தலை
நிலத்துகக் கலங்க வன்று சென்று கொன்று
வென்றி கொண்டவீரனே ,, 56

அங்கம் மங்க வன்று சென்று அடர்த்தெறிந்த
வாழியான் தி. ச வி. 57

மாறுசெய்தவாளரக்கன் நாளுலப்பவன்றிலங்கை
நீறு செய்து சென்று கொன்று வென்றி
கொண்ட வீரனூர் ,, 61

ஒருவில்லாலோங்கு முந்நீர்...
செருவிலே யரக்கர் கோனைச் செற்ற. திருமாலே. 11

சதுரமாமதிள் சூழிலங்கைக் கிறைவன் தலைபத்து
உதிரவோட்டி ஓர் வெங்கணையுய்த்தவன் அமலன். 4

முன்னிராமனாய் மாறடர்த்ததும் குல. 2. 3

தென்னிலங்கைக்கோன் முடிகள் சிந்துவித்தாய் ,, 8. 1

எரிநெடு வேலரக்கரொடு மிலங்கைவேந்தன்
இன்னுயிர்கொண்டு ,, 10. 7

மின்னிடைச் சீதை பொருட்டா இலங்கையர்
மன்னன் மணிமுடி பத்தும்முடன்வீழ பெரி. 2 6. 8

தென்னிலங்கை மன்னன் சிரந்தோள்
துணிசெய்து ,, 2 6 9

கள்ளவரக்கியை மூக்கொடு காவலனைத்
தலைகொண்டாய் ,, 2. 7. 5

காரார்கடலை அடைத்திட்டிலங்கைபுக்கு ஓராதான்
பொன்முடி ஒன்பதோடொன்றையும் நேரா ,, 3, 9. 10

வல்லாளன் தோளும் வாளரக்கன் முடியும் தங்கை
பொல்லாத மூக்கும் போக்குவித்தான்
பொருந்தும் மலை ,, 4. 2 2

எரி சிதறுஞ் சரத்தால் இலங்கையினை
தன்னுடைய வரிசிலை வாயிற்பெய்து வாய்க்-
கோட்டந் தவிர்த்துகந்த அரையனமரும் மலை ,, 4. 3. 8

தங்கையை மூக்குந்தமையனைத் தலையுந்தடிந்த
வெந்தாசரதி பெரி. 4. 7. 1

பெருவரங்களவை பற்றிப் பிழக்குடைய
விராவணனை உருவரங்கப் பொருதழித்து
இவ்வுலகினைக் கண் பெறுத்தானூர் ,, 4. 8. 5

பருவரங்களவை பற்றிப் படையாலித்தெழுந்தானை
செருவரங்கப் பொருதழித்த திருவாளன் ,, 4. 8. 10

சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச்
செற்ற திருப்பாவை. 12

பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந்தானை ,, 13

மாதலிதேர் முன்பு கோல் கொள்ள மாய விராவணன்
மேல் சரமாரிதாய்தலையற்றற்று வீழத்தொடுத்த
தலைவன் நாச். தி. 5. 3

போர்காலத் தெழுந்தருளிப் பொருதவனூர்
பேர்சொல்லி ,, 8. 8

நாழாலமர் முயன்ற வலவரக்கனின்றுயிரை
வாழாவகை வலிதல் கின்வலியே பெ. தி. 11

சூழ்ந்தெங்கும் வாள்வரைகள் போலரக்கன்
வன்தலைகள் தாமிடியத்
தாள் வரை வில்லேந்தினூர்தாம் ,, 17

சூட்டாய நேமியான் தொல்லரக்கனின்றுயிரை
மாட்டேட துயரிழைத்தமாயவனை
ஈட்ட வெறி கொண்ட தண்டுழாய் வேதியனை
நெஞ்சே அறிகண்டாய் சொன்னேனது ,, 66

வைதேவி காரணமா ஏரார்
தடந்தோளிராவணனை ஈரைந்து சீரார்
சிரமறுத்துச் செற்றுகந்த செங்கண் மால் சி. தி. ம.

மன்னனிராவணனை மாமண்டு வெஞ்சமத்துப்
பொன் முடிகள் பத்தும் புரளச் சரந்துரந்து பெ. தி. ம.

நீள் கடல் சூழிலங்கைகோன் தோள்கள் தலை
துணி செய்தான் நம். 1. 6. 7

சூழாங்கோன் பேரரக்கன் குலம்வீய முனிந்தவனை ,, 2 3. 11

இலங்கை யரக்கர் குலம் முருடு தீர்த்தபிரான் ,, 2. 7. 10

தன்னணிலங்கைக்கு இறையைச் செற்ற நஞ்சனை. ,, 3. 8. 2

மதிளிலங்கைக் கோவை வீயச்சிலைகுனித்தாய் ,, 4. 3. 1

கடியவினையே முயலும் ஆண்டிறல்
மீளிமொய்ம்பின் அரக்கன் குலத்தைத்தடிந்து
மீண்டுமவன் தம்பிக்கே விரிநீரிலங்கையருளி
ஆண்டுதன்சோதிபுக்க அமரரரியேற்றினையே ,, 7. 6. 9

தேராளும் வாளரக்கன் செல்வம் மாள தி. நெ தா. 20

தென்னிலங்கையரன் சிதறி யவுணன்மாளச்
சென்று ,, 28

குன்றுதலையரக்கர் கோனைமாளக் கொடுஞ்சிலை-
வாய்ச் சரந்துரந்து குலங்களைந்து வென்றனை ,, 29

தானவனுகம் தரணியில் புரளத்
தடஞ்சிலைகுனித்தவென் தலைவன் கலி. 1. 4. 1

இருநிதிக்கிறைவனும் அரக்கர் குலங்களும் கெட
முன்கொடுந்தொழில் புரிந்த கொற்றவன் ,, 1. 4. 3

மதின் நீரிலங்கை வாளரக்கர் தலைவன்
தலைபத்தறுத்துகந்தான் ,, 1. 5. 1

கண்ணார்கடல் சூழ் இலங்கைக் கிறைவன்தன்
திண்ணாகம் பிளக்கச் சரம் செலவுய்த்தாய் ,, 1. 10. 1

தையலாள் மேல் காதல் செய்தானவன்
வாளரக்கன்
பொய்யிலாத பொன் முடிகளொன்பதோடொன்றும்
அன்று செய்தவெம்போர் தன்னிலங்கோர்
செஞ்சரத்தாலுருள ,, 2. 2. 2

பரதனும் தம்பிசத்துருக்கனனுமிலக்குமனோடு
மைதிலியும்
இரவு நன்பகலும் துதி செய்ய நின்ற
இராவணாந்தகனை யெம்மானை — கலி. 2. 3. 7

கதிர் நீண் முடிபத்து மறுத்தமரும்
நீலமுகில் வண்ணன் — ,, 2. 4. 5

தென்னிலங்கை யரக்கர் வேந்தை விலங்குண்ண
வலங்கை வாய்ச்சரங்களாண்டு — ,, 2. 5. 9

மின்னினுண்ணிடை மடக் கொடிகாரணம்
விலங்கலின் மிசையிலங்கை மன்னன்
நீண் முடிபொடி செய்த மைத்தன் — ,, 3. 1. 7

பொருவில் வலம்புரியரக்கன் முடிகள் பத்தும்
புற்று மறிந்தன போலப் புவிமேல் சிந்தச்
செருவில் வலம் புரி சிலைக்கை
மலைத்தோள் வேந்தன் — ,, 3. 4. 7

மின்னனைய நுண்மருங்கல் மெல்லியற்கா
இலங்கை வேந்தன் முடியொருபதும் தோளிரு-
பதும் போயுதிர தன்னிகரில் சிலைவளைத்து — ,, 3. 9. 5

வாள் நெடுங்கண் மலர்க்கூந்தல் மைதிலிக்கா
இலங்கைமன்னன் முடியொருபதும் தோளிருபதும்

போயுதிரத் தான் நெடுங்கண் சிலைவளைத்த
தயரதன் சேய் — ,, 3. 10. 6

கம்பமாகடலடைத் திலங்கைக்கு மன் கதிர்
முடியவை பத்தும் அம்பினாலறுத்து — ,, 4. 2. 1

தான்போலு மென்றெழுந்தான் தரணியாளன்...
கோன்போலு மென்றெழுந்தான் குன்றமன்ன
இருபதுதோளுடன் துணித்த வொருவன்கண்டீர் — ,, 4. 4. 6

முனைமுகத்தரக்கன் மாளமுடிகள் பத்தறுத்து
வீழ்த்து ஆங்கனையவற்கிளையவற்கே
அரசளித் தருளினான் ...

விறல்வாளரக்கர் தலைவன்தன் வற்பார் திரள்
தோள் ஐந்நான்கும் துணித்த வல்வில்ராமன் கலி. 5. 1. 4

ஆறினொடொரு நான்குடை நெடுமுடி அரக்கன்
தன் சிரமெல்லாம் வேறு வேறாக வில்லது
வளைத்தவனே ,, 5. 3. 7

வம்புலாங் கூந்தல மண்டோதரி காதலன்
வான்புக
அம்புதன்னால் முனிந்த அழகனிடம் கலி, 5. 4. 5

சுரி குழல் கனிவாய்த்திருவினைப் பிரித்த
கொடுமையிற்கடு விசையரக்கன்
எரிவிழித்திலங்கு மணி முடிபொடி செய்து ,, 5. 7. 7

விளங்கிழை பொருட்டு வில்லால்
இலங்கை மாநகர்க்கிறைவன்
இருபது புயம் துணித்தான் ,, 5. 9. 6

மற்று நீள்கடல் சூழ் இலங்கையிராவணனைச்
செற்றாய் ,, 6. 3. 5

கல்லார் மதிள் சூழ் கடியிலங்கைக் காரரக்கன்
வல்லாகம் கீள
வரி வெஞ்சரந்துரந்த வில்லானை ,, 6. 8. 5

பழியாரும் விறலரக்கன் பருமுடிகளவைசிதற
அழலாரும் சரந்துரந்தான் ,, 6. 9. 2

இலங்கைக் கோன் வல்லாகம் வில்லால் முனிந்த
வெந்தை ,, 6. 10. 4

செம்பொன் மதிள் சூழ் தென்னிலங்கைக் கிறைவன்
சிரங்கள் ஐயிரண்டும் உம்பர்வாளிக் கிலக்காக
உதிர்த்தவுரவோன் ,, 7. 5. 3

பந்தணைந்த மெல்விரலாள் சீதைக்காகிப் பகலவன்
மீதியங்காத இலங்கை வேந்தன்

அந்தமில் திண் கரஞ்சிரங்கள் புரண்டுவீழ
அடுகணையாலெய்துகந்தவம்மான் கலி. 7. 8. 7

தோன்றல் வாளரக்கன் கெடத்தோன்றிய
நஞ்சினை ,, 7. 10. 8

இலங்கையர்கோனது வரையாகம் மலங்க
வெஞ்சமத்தடுசரந் துரந்த எம்மடிகளும் ,, 8. 5 7

வல்லியிடையாள் பொருட்டாக மதிள்
நீரிலங்கையார் கோவை அல்லல் செய்து
வெஞ்சமத்துள் ஆற்றல்மிகுத்த வாற்றலான் ,, 8. 6. 3

கெடும்புணரி சேமமதின சூழிலங்கைக்கோன்
சிரமுங்கரமும் துணித்து ,, 8. 6. 5

வானுளாரவரை வலிமையால் நலியும்
மறிகடலிலங்கையார் கோனைப்
பானுநேர்சரத்தால பனங்கனிபோலப்
பருமுடியுதிர வில்வளைத்தோன் ,, 9. 1. 7

சிரமுனைத்துமைந்தும் சிதைந்தச்சென்று
அரக்கனுரமும் கரமும்துணித்த உரவோன் ,, 9. 6. 4

வணங்கலிலரக்கன் செருக்களத்தவிய
மணிமுடியொருப துடம்புரள
அணங்கெழுந்தவன் தன் கவந்தம் நின்றாட கலி. 9. 8. 5

காவலனிலங்கைக் கிறைகலங்கச்
சரம்செலவுய்த்து
மற்றவன் ஏவலம் தவிர்த்தான் ,, 9. 10. 6

இராவணன் பட்டனன் ,, 10. 2. 1

இலங்கைக் கிறைதன்னை யெங்களை யொழியக்
கொலை அவனைச் சூழுமா, நினை ,, 10. 2. 7

புன்மையாளன் செஞ்சில் புக, எய்த ,, 10. 2. 8

ஞாலமாளுமுங்கள் கோமான் எங்களிராவணற்கு
காலனாகி வந்த வா கண்டஞ்சி கலி. 10. 3. 3

## அரக்கர் லட்சுமணனைத் துதித்தல்

மணங்கள் நாறும் வார்குழலார் மாதர்களாதரத்தை
புணர்ந்தசிந்தைப் புன்மையாளன் பொன்றவரி
சிலையால் கணங்களுண்ண வாளியாண்ட
காவலனுக்கிளையோன் குணங்கள்
பாடியாடுகின்றோம் குழமணிதூரமே ,, 10. 3. 4

இலங்கை மலங்க வரக்கன் செழுநீண்முடி தோளொடு
தாள் துணிய அறுத்திட்டவன் காண்மின் ,, 10. 6. 8

அரக்கியராகம் புல்லென வில்லால அணிமதிள்
இலங்கையர்கோனைச் செருக்கழித்து அமரர்
பணிய முன்னின்ற சேவகமோ செய்ததின்று ,, 10. 9. 6

## விபீஷணனுக்கு அரசு

அவன் தம்பிக்கரசு மீந்து ,, குல. 10. 7

மின்னிலங்கு பூண் விபீடணநம் பிக்கு
என்னிலங்கு நாமத்தளவும் அரசென்ற பெரி. 2. 6. 9

கோரவவன் தம்பிக்கே நீளரசீந்த
ஆராவமுதனை ,, 3. 9. 10

அரசவன் தம்பிக்கு அளித்தவன் ,, 4. 2. 1

இளையவற்கே அரசளித்து கலி. 4. 6. 4

செல்வ விபீடணற்கு வேறாக நல்லானை ,, 6. 8. 5

விபீடணற்கு நல்லான் ,, 6. 10. 4

அலைநீரிலங்கைத் தசக்கிரீவற்கு
இளையோற்கரசை யருளி ,, 8. 6. 7

## இராக்கதர்கள் சுக்ரீவாதிகளிடம் சரணம் புகுதல்

சாம்பவானுடன் நிற்கத் தொழுதோம்
இலங்கு வெங்கதிரோன் தன் சிறுவா
குரங்குகட்கரசேயெம்மைக் கொல்லேல் கலி. 10. 2. 9

ஏத்துகின்றோம் நாத்தழும்ப இராமன்திருநாமம்
சோத்த நம்பீ சுக்கிரீவா உம்மைத்தொழுகின்றோம்
எம்மை உங்கள் வானரம் கொல்லாமே
வார்த்தைபேசீர் ,, 10. 3. 1

நீலன் வாழ்க சுடேணன் வாழ்க அங்கதன் வாழ்க ,, 10. 3. 3

காவலனுக்கு இளையோன் குணங்கள்பாடி ,, 10. 3. 4

எம்பெருமான் தமர்காள்
வென்றிநந்தோம் நீரெம்மைக்கொல்லாதே ,, 10 3. 5

வெங்கதிரோன் சிறுவா—கொல்லவேண்டா . ,, 10. 3. 6

சிற்றம் நும்மேல் தீரவேண்டில் சேவகம்
பேசாதே ஆற்றல் சான்ற தொல்பிறப்பில்
அநுமனை வாழ்கவென்று கூற்றமன்னூர்
காண ஆடீர் குழமணிதூரமே ,, 10. 3. 7

கவளயானை பாய புரவி தேரொடரக்கரெல்லாம்
துவள, வென்ற வென்றியாளன் தன தமர்
கொல்லாமே தவளமாட நீடயோத்திக்
காவலன்றன் சிறுவன் குவளை வண்ணனை
காணவாடீர் குழமணிதூரமே கலி. 10. 3. 8

எங்களிராவணனார் ஓடிப்போனார்
நாங்களெய்த்தோம் உய்வதோர் காரணத்தால்
ஆடிப்போந்தோம் உங்கள் கோமானாணை
தொடரேன்மின் கூடிக் கூடியாடுகின்றோம்
குழமணிதூரமே ,, 10 3

## அரக்கர்வதம்

அலம்பா வெருட்டாக்கொன்று திரியுமரக்கரைக்
குலம்பாழ்படுத்துக் குலவிளக்காய் நின்ற
கோன்மலை — பெரி. 4. 2. 1

செருக்கடுத்தன்றுதிகைத்தவரக்கரை
உருக்கெடவாளி பொழிந்தவொருவனே — நம். 8. 6. 2

ஒருவரிருவரோர் மூவரெனநின்று உருவு கரந்து — ,, 8. 6. 3

வென்றசுரர் குலங்களைந்த வேந்தே — தி. நெ. தா. 16

(சுரவ்யதிரிக்தரிறே அசுரர் – அரக்கர் என்றபடி)
அம்பினாலரக்கர் வெருக்கொள நெருக்கி
அவருயிர் செகுத்தவெம் மண்ணலை — கலி 1. 1. 6

பேணாதவலியரக்கர் மெலியவன்று
பெருவரைத் தோளிறநெரித்தன்று — ,, 2. 5. 7

தீமனத்தரக்கர் திறலழிந்தவனேயென்று
சென்றடைந்தவர் தமக்கு
தாய்மனத்திரங்கியருளினைக் கொடுக்கும்
தயரதன் மதலையைச்சயமே — ,, 4. 3. 5

பிறையெயிற்றுவெள்ளெயிற்றுப்பகுவாய் முனி யெதிர்பொருது
மென வந்தவசுரர்
இறைகளவை நெறுநெறென வெறியவவர்
வயிறழல நின்றபெருமான் — ,, 5. 10. 4

மூளவெரிசிந்தி முனிவெய்தி, அமர்செய்து மென
வந்த வசுரர் தோளுமவர் தாளும் முடியோடு
பொடியாக நொடியாமளவெய்தான — ,, 5. 10. 5

விண்டநிசாசரரைத் தோளுந்தலையும் துணிவு
எய்தச் சுடுவெஞ்சிலைவாயச் சரந்துரந்தான் — 6. 7. 1

## பாதாள அரக்கர் வதம்

மிடைத்தமாலி மாலியான்
விலங்கு காலனூர்புக — தி. ச. வி. 28

உலகில் வன்மையுடையவரக்கர் அசுரரை
மாளப்படை பொருத நன்மையுடையவன் சீர்
பரவப் பெற்ற நானோர் குறைவிலனே — நம். 3. 10. 1

குலங்குலமா அசுரர்களை நீறாகும்படியாக
  நிருமித்துப் படைதொட்ட மாறாளன் — ,, 4. 8. 1

உடம்பினால் குறைவில்லா உயிர்பிரிந்த
மலைத்துண்டம் கிடந்தனபோல்
துணிபலவா அசுரர் குழாம் துணித்துகந்த — ,, 4. 8. 10

ஆளியைக் காண் பரியாய் அரிகாண் நரியாய்
அரக்கர் ஊளையிட்டன்றிலங்கை கடந்து
  பிலம்புக் கொளிப்ப
மீளியம் புள்ளைக் கடாய் விறல் மாலியைக் கொன்று
பின்னும் ஆளுயர் குன்றங்கள் செய்து
  அடர்த்தான் — ,, 7. 6 8

மாசினமாலி மாலிமானென்று அங்கவர் படக்
கனன்று முன்னின்ற — ,, 9. 2. 6

இலங்கைப்பதிக்கு அன்றிறையாய
அரக்கர் குலம் கெட்டவர் மாளக்
  கொடிப்புள் திரித்தாய் — கலி. 1. 10. 2

தாங்கரும் போர் மாலிபடப் பறையூர்ந்து
தராதலத்தோர் குறை முடித்த தன்மையானை — ,, 2. 10. 4

சிறையாருவணப் புள்ளொன்றேறி...
கறையார் நெடுவேலரக்கர் மடிய — ,, 3. 8. 4

பொருந்தாவரக்கர் வெஞ்சமத்துப் பொன்ற வன்று
புள்ளூர்ந்து பெருந்தோள் மாலி தலைபுரளப்

பேர்ந்தவரக்கர் தென்னிலங்கை
இருந்தார் தம்மையுடன் கொண்டு
அங்கெழிலார் பிலத்துப் புக்கொட்ப
கருந்தாள் சிலைகைக் கொண்டானூர் கலி. 8. 6. 2

## பட்டாபிஷேகம்

கொண்ட கோலத்தொடு வீற்றிருந்தும் மணங்
கூடியும் கண்டவாற்றால் தனதேயுலகென
நின்றான் தன்னை வண்டமிழ் நூற்க
நோற்றேன் அடியார்க்கின்பமாரியே நம். 4. 5. 10

அம்பொனெடு மணிமாடவ யோத்தி யெய்தி
அரசெய்தி குல 10 8

## பெருமான் கேட்ட உபந்யாஸம்

அகத்தியன் வாய்த்தான் முன் கொன்றான்
தன் பெருந்தொல் கதை கேட்டு மிதிலைச் செல்வி
உலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள்
செம்பவளத்திரள் வாய்த்தன் சரிதை கேட்டான் குல. 10. 8

## லவணாசுரவதம்

இலவணன் தன்னைத் தம்பியால் வானேற்றி ,, 10. 9

## இலக்குமணனைப் பரிதல்

முனிவன் வேண்ட
திறல் விளங்கு மிலக்குமனைப் பிரிந்தான் ,, 10. 9

## தன்னுடைச் சோதி எழுந்தருளுதல்

அன்று சராசரங்களை வைகுந்தத் தேற்றி...
இலங்கு மணி நெடுந் தோள் நான்கும் தோன்ற...
தன் தாமம் மேவி...இனிது வீற்றிருந்தவம்மான் ,, 10. 10

(இராமாவதாரம் முடிந்தது)

## ஸ்ரீ க்ருஷ்ணாவதாரம்

அசைவில் சீர்க்கண்ணன் நெடுமால் பொ. 7

பெற்றார் தளைகழல ,, 20

அரவ மடல்வேழம் ஆன் குருந்தம் புள்வாய்
குரவை குட முலை மற்குன்றம் கரவின்றி
விட்டிறுத்து மேய்த்தொசித்துக் கீண்டு
கோத்தாடி உண்டட்டெடுத்த செங்கணவன் ,, 54

கமன் தமராலாராயப் பட்டதியார் கண்டீர்......
பேராயர்க்காட் பட்டார்பேர் ,, 55

கேசவனை ,, 100

இழைப்பரிய ஆயவனே யாதவனே என்று
அவனை யார்முகப்பும் மாயவனேயென்று மதித்து பூ. 50

மாலே நெடியோனே கண்ணனே ,, 100

அவரிவரென்றில்லை யணங்கவேள் தாதைக்கு
எவருமெதிரில்லைகண்டீர் நான். தி. 56

ஆறுமாறு .....
ஊனெருடோசையாயவைந்தும் ஆயவாயமாயனே தி. ச. வி. 2

ஒன்றிரண்டு தீயுமாகி ஆயனாய மாயனே ,, 7

உன்கருத்தை யாவர்காண வல்லர் கண்ணனே ,, 25

ஆதியாகியாயனாய மாயமென்ன மாயமே ,, 34

கொம்பராவு நுண்மருங்கல் ஆயர் மாதர்
பிள்ளையாய் எம்பிரானுமாய வண்ணம் ,, 35

ஆட்கத்த பூண்முலை அசோதையாய்ச்சி
பிள்ளையாய் தி. ச. வி. 36

ஆனைகாத்து......அதன் நியாயர் பின்னேபாய் தி. ச. வி. 40
ஆயருக்கியாயர்மங்கை வேய தோள்விரும்பினுய் „ 41
ஆயர் தம் கொழுந்தேயென்னும் திருமாலை. 2
கற்றினம் மேய்த்த வெந்தை „ 9
தனி கிடந்தரசு செய்யும் தாமரைக் கண்ணனெம்மான் „ 16
காரொளி வண்ணனே கண்ணனே „ 29
வேலை வண்ணனை என் கண்ணனை குல. 1. 4
ஆதியாயன் அரங்கனந்தாமரை பேதை
மாமணவாளன் தன்—பித்தனே „ 3. 5
ஆயனே அரங்காவென்றழைக்கின்றேன் „ 3. 8
6-ம் திருமொழி முழுதும் கண்ணன் விஷயமே
வாசுதேவா „ 6. 1
தாமோதரா „ 6. 2
மருதிறுத்தாய் „ 6. 3
மனக்கேதம் சாரா மதுசூதன் தன்னே நான். தி. 61

## மதுசூதன்

அநிருத்தன் மதுஸூதநன் என்பர் பெரியோர்.
அநிருத்தன் அவதார கந்தபூதன் என்பதும்
பிரஸித்தம்.
மதுசூதனே மார்பில் தங்கவிட்டு வைத்து பெரி. 4. 5. 6
மன்னவன் மதுசூதனென்பார் „ 4. 5, 7
ஓங்குமுந்நீர் வளப் பெருநாடன் மதுசூதனன் தி. வி. 59
மதுசூதா நீயருளாய் நம். 7. 8. 1
மதுசூதனே „ 7. 10. 3
மதுசூதவம்மானுறை பூத்த பொழில்தன்
திருக்கடித்தானத்தை „ 8. 6-6

| | |
|---|---|
| மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா | தி. ப. 1 |
| கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்<br>எண்ணே சுண்ணம் எதிரெதிர் தூவிட | பெரி. 1. 1. 1 |
| நாடுவார் நம்பிரான் எங்குற்றானென்பார் | ,, 1. 1. 2 |
| திருவோணத்தான் உலகாளு மென்பார்களே | ,, 1. 1. 3 |
| வாயுள் வையகங் கண்ட மடநல்லார்<br>ஆயர் புத்திரனல்லன் அருந்தெய்வம்<br>பாய சீருடைப் பண்புடைப் பாலகன்<br>மாயனென்று மகிழ்ந்தனர் மாதரே | ,, 1. 1. 7 |
| பேதைக்குழவி பிடித்துச் சுவைத்துண்ணும் | ,, 1. 2. 1 |
| அணைத்தார வுண்டு கிடந்த விப்பிள்ளை | ,, 1. 2. 3 |
| உழந்தாள் நறுநெய் ஓரோ தடாவுண்ண<br>இழந்தாளெரிவினுல் ஈர்த்தெழில் மத்தின்<br>பழந்தாம்பாலோச்சப் பயத்தால் தவழ்ந்தான் | ,, 1. 2. 4 |
| அத்தத்தின் பத்தா நாள் தோன்றிய வச்சுதன் | ,, 1. 2. 6 |
| வந்தமதலைக்குழாத்தை வலி செய்து<br>தந்தக்களிறு போல் தானே விளையாடும்<br>நந்தன் மதலை | ,, 1. 2. 8 |
| செய்த்தலை நீலநிறத்துச் சிறுப்பிள்ளை | ,, 1. 2. 12 |
| ஆய்ச்சி மகனாகக் கொண்டு வளர்க்கின்ற<br>கோவலக்குட்டற்கு | ,, 1. 2. 13 |
| நாக்கு வழித்து நீராட்டு மிந்நம்பிக்கு<br>வாக்கும் நயனமும் வாயும் முறுவலும்<br>மூக்குமிருந்தவாறு | ,, 1. 2. 16 |
| வசுதேவர் தம்மகனாய் வந்து | ,, 1. 2. 15 |
| தேவகி பெற்றவுருவுகரிய ஒளிமணிவண்ணன் | ,, 1. 2. 17 |
| சிற்றிலிழைத்துந் திரிதருவோர்களைப்<br>பற்றிப்பறித்துக் கொண்டோடும் பரமன், | ,, 1. 2. 19 |

மழகன்றினங்கள் மறித்துத்திரிவான் பெரி. 1. 2. 20

## கண்ணனை விளிக்கும் விளி

மாணிக்குறளனே ,, 1. 3. 1

உடையாயழேல் ,, 1. 3. 2

தாமரைக்கண்ணனே ,, 1. 3. 3

செங்கட்கருமுகிலே—தேவசிங்கமே ,, 1. 3. 4

தூமணிவண்ணனே ,, 1. 3. 5

சுந்தரத்தோளனே ,, 1. 3. 6

## கண்ணன் சைசவம்

என்மகன் — கோவிந்தன் ,, 1. 4. 1

என்சிறுக்குட்டன் ,, 1. 4. 2

வேங்கடவாணன் ,, 1. 4. 3

சக்கரக்கையன் ,, 1. 4. 4

தண்டொடுசக்கரம் சார்ங்கமேந்தும் தடக்கையன் ,, 1. 4. 6

சிறியனென்னிளஞ்சிங்கத்தை ,, 1. 4. 8

அசோதை தன்மகன் ,, 1. 4. 10

பின்னைத் தொடர்ந்தோர் கருமலைக்குட்டன் ,, 1. 7. 5

காமர்தாதை தளர் நடை நடவானோ ,, 1. 7. 6

தக்க மாமணிவண்ணன் வாசுதேவன் தளர்நடை நடவானோ ,, 1. 7. 8

ஆயர்குலத்தினில் வந்துதோன்றிய அஞ்சனவண்ணன்தன்னை ,, 1. 7. 11

ஆயர்பெருமானே ,, 1. 8. 3

ஆழியங்கையனே ,, 1. 8. 5

காரொக்குமேனிக் கரும்பெருங்கண்ணனே
ஆயர்கள்போரேறே பெரி. 1. 8. 6

சக்கரக்கையனே சங்கமிடத்தானே „ 1. 8. 7

மார்வில் மறுவனே „ 1. 8. 9

வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க
மொட்டு நுனியில் முளைக்கின்ற முத்தேபோல்
சொட்டுச் சொட்டென்னத்துளிக்கத்துளிக்க
என்குட்டன் வந்தென்னைப்புறம்புல்குவான் „ 1. 9. 1

பார்த்தன் சிலைவளையத்திண்தேர்மேல்
முன்னின்ற செங்கண் அலைவலை „ 2. 1. 2

இருட்டிற்பிறந்துபோய் ஏழைவல்லாயர்
மருட்டைத்தவிர்ப்பித்து „ 2. 1. 4

## துரியோதனன் பஹுமானம் செய்தது

சுழல் மன்னர் சூழக் கதிர் போல் விளங்கி
எழலுற்று மீண்டேயிருந்துன்னை நோக்கும்
சுழலைப் பெரிதுடைத் துச்சோதனனை
அழல விழித்தானே யச்சோ - ஆழியங்கையனே „ 1. 8. 5

## ஸ்ரீக்ருஷ்ணன்

அசோதையிளஞ் சிங்கம் கொத்தார் கருங் குழல்
கோபால கோளரி „ 2. 1. 7

திருவாயர் பாடிப்பிரானே „ 2. 3. 7

வன்புற்றரவின் பகைக் கொடி வாமன நம்பி „ 2. 3. 8

## பற்பல லீலைகள்

என்னைக் குடத்தையுருட்டி
இளம்பிள்ளை கிள்ளியெழுப்பி
கண்ணைப் புரட்டி விழித்து „ 2. 4. 6

காட்டைநாடித் தேனுகனும்களிறும்...மடிய. நாச் தி. 14. 9

தீமனத்தான் கஞ்சனது வஞ்சனையில்திரியும்
தேனுகனும் பூதனைதனுருயிரும செகுத்தான் கலி. 3. 10. 7

கழுதையும் ........மடிவித்து ,, 8. 6 8

தேனுகனவி போயுக வங்கோர்
செழுந்திரன் பனங்கனியுதிரத்
தானுகைத்தெறிந்த தடங்கடல் வண்ணர் ,, 9. 8. 7

(தேனுகாசுரவதம் முடிந்தது)

## நரகாசுரன் வதம்

தேனுகனும் முரனுந்திண்டிறல் வெந்நரகன்
என்பவர்தாம் மடியச் செருவதிரச் செல்லும் பெ. தி. 1. 5. 4

கிழக்கிற்குடி மன்னர் கேடிலாதாரை
அவ்வாழியதனுல விழிக்குமளவிலே
வேரறுத்தானை ,, 2. 5. 6

மன்னுநரகன் தன்னைச் சூழ்போகி வளைத்தெறிந்து
கன்னிமகளிர் தம்மைக் கவர்ந்த கடல்வண்ணன் ,, 4. 3. 3

நமியும் நரகனை வீட்டிற்றும் தி. வி. 78

ஆருநசினத்தின் மிகுநரகனுரமழித்த கலி. 3. 9. 8

வென்றி மிகு நரகனுரமது அழியவிசிறும் கலி 3. 10. 2

நரகனைத் தொலைத்த கரதலந்தமைதியின்
கருத்தோ ,, 10. 9. 4

## காளியநர்த்தனம்

அரவம் விட்டு பொ. 54

அடிச்சகடம் சாடி யரவாட்டி நான். தி. 33

ஓர் பொய்கை வாய்விடங்கலந்த பாம்பின்மேல்
நடம் பயின்ற நாதனே. தி. ச. வி. 38

சலங்கலந்த பொய்கைவாய் ஆடராவின்
வன்பிடர் நடம் பயின்ற நாதனே ,, 86

| | |
|---|---|
| போர் அரவீர்த்தகோன் | குல. 2. 5 |
| காலால காளியன் தலைமிதித்ததும் | ,, 7. 9 |
| ஐந்தலைய பைந்நாகத் தலைப்பாய்ந்தவனே | தி. ப. 10 |
| கானகமா மடுவிற் காளியனுச்சியிலே<br>தூயநடம் பயிலுஞ் சுந்தர வென்சிறுவா | பெரி. 1. 5. 6 |
| நஞ்சுமிழ் நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு<br>அஞ்சப்பணத்தின்மேல பாய்ந்திட்டருள் செய்த | ,, 1. 8. 3 |
| காயுநீர் புக்குக் கடம்பேறி<br>காளியன் தீயபணத்தில் சிலம்பார்க்கப்<br>பாய்ந்தாடி | பெரி. 2. 1. 3 |
| பின்தொடர்ந்தோடிப்போய் பாம்பைப் பிடித்துக்<br>கொண்டாட்டினாய் போலும் | ,, 2. 4. 8 |
| தடம்படு தாமரைப் பொய்கைகலக்கி<br>விடம்படுநாகத்தை வாலைப்பற்றியீர்த்து<br>படம்படு பைந்தலைமேலெழப் பாய்ந்திட்டு | ,, 2. 10. 3 |
| நீள்பொய்கைபுக்கு நஞ்சுமிழ் நாகத்தினோடு<br>பிணங்கவும்<br>நானுயிர் வாழ்ந்திருந்தேன் | ,, 3. 3. 6 |
| அரவம் துரந்திட்டு | ,, 3. 5. 11 |
| தேனுகன் பிலம்பன் காளியனென்னுந்<br>தீப்பப் பூடுகளடங்கவுழக்கி | ,, 3. 6. 4 |
| நஞ்சுமிழ் நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு<br>அஞ்சப் பணத்தின்மேல பாய்ந்திட்டருள்<br>செய்த அஞ்சன வண்ணனை | ,, 3. 9. 5 |
| காளியன் பொய்கை கலங்கப்பாய்ந்திட்டு<br>அவன் நீண்முடியைந்திலும் நின்று நடஞ்செய்து<br>மீளவவனுக்கு அருள் செய்த வித்தகன் | ,, 3. 9. 7 |
| கஞ்சனுங்காளியனும்......வஞ்சனையில் மடிய | ,, 4. 3. 2 |
| ஆதிகொண்டரவில்நடித்தாய் | நாச். தி. 3. 2 |

பூத்தநீள் கடம்பேறிப் புகப்பாய்ந்து
வாய்த்த காளியன் மேல் நடமாடிய நாச். தி. 4. 4

நீர்க்கரைநின்ற கடம்பையேறிக் காளியனுச்சியில்
நட்டம் பாய்ந்து போர்க்களமாக நிருத்தஞ்செய்த ,, 12. 5

பாம்பாலாப்புண்டு பாகுற்றுலும் சோம்பாது பெ. தி. 18

நீரார் நெடுங்கயத்தைச் சென்றலைக்க நின்றுரப்பி
ஓராயிரம் பண வெங்கோவியல்நாகத்தை
சீரார்திருவடியால் பாய்ந்தான் சி. தி. ம

உரவு நீர்ப்பொய்கை நாகம் காய்ந்ததும் நம். 6. 4. 1

அரவம் வெருவ முனநாள் பூம்புனற் பொய்கை
புக்கானவனுக்கு இடந்தான் கலி. 2. 9. 5

முளைத்த வெயிற்றழல நாகத்துச்சியில
நின்றதுவாடத் திளைத்தமர் செய்து ,, 3. 3. 4

தளைக்கட்டவிழ்தாமரை வைகுபொய்கைத்
தடம்புக்கடங்கா விடயகாலரவம்
இளைக் கத்திளைத்திட்டதனுச்சி தன்மேல்
அடிவைத்தவம்மான் ,, 3. 8. 7

பல்லவந்திகழ பூங்கடம்பேறி அக்காளியன்
பணவரங்கில—ஒல்லைவந்துறப் பாய்ந்தரு
நடஞ்செய்த உம்பர்கோன் ,, 4. 2. 2

படவரவுச்சிதன் மேல்பாய்ந்து
பன்னடங்கள் செய்து ,, 4. 6. 5

கடுவிடமுடைய காளியன் தடத்தைக் கலக்கி
முன்னலக்கழித்து
அவன்தன் படமிறப் பாய்ந்து பன்மணிசிந்தப்
பல்நடம் பயின்றவன் கோயில் 4. 10. 3

காளியன் தன் சென்னி நடுங்க நடம்பயின்ற
பொற்றாமரையாள் தன்கேள்வன் பெரி. 5. 1. 10

பாய்ந்தான் காளியன்மேல் ,, 6. 7. 5

விடந்தானுடையவரவம் வெருவ
செருவில் முனநாள்—முன் தடந்தாமரை
நீர்ப் பொய்கைபுக்கு மிக்க தாடாளன் ,, 6. 10. 2

பச்சிலைப் பூங்கடம்பேறி விசைகொண்டு
பாய்ந்துபுக்கு—ஆயிரவாய்
நச்சழற் பொய்கையிருகத்திறேடு பிணங்கி
நீ வந்தாய் போலும் ,, 10. 7. 12

புக்காடரவம் பிடித்தாட்டும் புனிதர் ,, 10. 8. 8

## பிரலம்பாசுரவதம்

தேனுகன் பிலம்பன் காளியனென்னும் பெ. தி. 3. 6. 4

கருளுடைய......பிலம்பனையும் ,, 4. 9. 3

பிலம்பன்றன்னைப் பண்ணழியப்
பலதேவன் வென்ற நாச். தி. 12. 7

## கோபிகா வஸ்த்ராபஹரணம்

அந்நாள் எங்கள் பூம்பட்டுக் கொண்ட
அரட்டன் பெ. தி. 2. 1. 4

துகில்கைக் கொண்டு விண்டோய் மரத்தானு
மின்றுமுற்றும் வேண்டவுந்தாரான் ,, 2. 10. 2

தோழியும் நானும் தொழுதோம்
துகிலைப்பணித்தருளாயே நாச். தி. 3. 1

குருந்திடைக் கூறைபணியாய் ,, 3. 2

நீ வேண்டியதெல்லாந்தருவோம்
பல்லாருங்காணுமே போவோம்
பட்டைப்பணித்ருளாயே நாச். தி. 3. 3

குருந்திடைக் கூறைபணியாய் ,, 3. 4

கோலங்கரிய பிரானே குருந்திடைக் கூறை பணியாய் ,, 3. 5

படிற்றையெல்லாந்தவிர்த்து எங்கள்
பட்டைப்பணித்தருளாயே ,, 3. 6

போரவிடா யெங்கள் பட்டைப் பூங்குருந்
தேறியிராதே ,, 3. 7

கோமளவாயர்கொழுந்தே குருந்திடைக் கூறை
பணியாய் ,, 3. 8

வஞ்சகப பேய்ச்சி பாலுண்ட மசிமையிலீ
கூறைதாராய் ,, 3. 9

துனையார் கருமென்குழலாய்ச்சியர்தம் துகில்வாரியும்
சிற்றில் சிதைத்தும் கலி. 3. 8. 8

ஆயர்மாதர் இளவனே கொண்டான் ,, 6. 6. 7

(வளை வஸ்த்ர உபலக்ஷகம்)

ஆயர்மடமக்களைப் பங்கய நீர்குடைந்தாடுகின்றார்கள்
பின்னே சென்றொளித்திருந்து
அங்கவர் பூந்துகில் வாரிக்கொண்டிட்டு
அரவேரிடையாரிரப்ப
'மங்கைநல்லீர் வந்து கொண்மி'னென்று
மரமேறியிருந்தாய் போலும் ,, 10. 7. 11

## பத்தவிலோசனம்

வேர்த்துப் பசித்து வயிறசைந்து
வேண்டடிசிலுண்ணும்போது
ஈதென்று பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும்
பத்தவி லோசனத்துய்த்திடுமின் நாச். தி. 12. 6

## கோவர்த்தனோத்தரணம்

| | |
|---|---|
| மலையால்குடைகவித்து | பொ. 27 |
| இடந்தது பூமி யெடுத்தது குன்றம் | ,, 39 |
| குன்றம்......எடுத்த | ,, 54 |
| சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு | ,, 69 |
| வரைகுடைதோள்காம்பாக ஆநிரைகாத்து | ,, 83 |
| குன்றெடுத்துப் பாயும் பனிமறுத்தபண்பாளா | ,, 86 |
| குன்றம் குடையாக ஆ காத்த கோ | பே. 41 |
| அவனே பருவரையால் ஆநிரைகள் காத்தான் | ,, 51 |
| இமயப்பெருமலை போலிந்திரனூர்க்கிட்ட<br>சமயவிருந்துண்டார்காப்பார் | நான். தி. 87 |
| வெற்பெடுத்து மாரிகாத்த மேக-<br>வண்ணனல்லயே | தி. ச. வி. 39 |
| அன்றுகுன்றமொன்றினால் ஆனேகாத்து | ,, 40 |
| தொறுக்கலந்த வூனமஃது ஒழிககவன்று குன்றமுன்<br>பொறுத்த நின் புகழ்க்கலாலோர் நேசமில்லை நெஞ்சமே | ,, 106 |
| மழைக்கன்று வரைமுனேந்தும் மைந்தனே | திருமாலை. 36 |
| வன்குன்றமேந்தி ஆவினையன்று(ய்)ய<br>கொண்டவா யரேறுறை | குல. 1. 4 |
| குன்றினால குடைகவித்ததும் | ,, 7. 9 |
| மத்தமாமலை தாங்கியமைந்தன் | பெ. 1. 1. 8 |
| காரகன் மேகமவை கல்லொடு கார்பொழியக்<br>கருதி வரைக் குடையாக் காலிகள் காப்பவனே | ,, 1. 5. 2 |
| மலையையெடுத்து மகிழ்ந்து கல்மாரிகாத்து | ,, 2. 3. 7 |
| குன்றெடுத்தாய் | 2. 9. 6 |

வானவர் கோன்விட வந்தமழை தடுத்து ஆகிரை
காத்தான் பெ. 2. 10. 4

கோவலரித்திரற்குக் காட்டிய சோறும்
கறியுந் தயிரும் கலந்துடனுண்டாய் ,, 3. 3. 8

குன்றெடுத்தாகிரை காத்தபிரான்
கோவலனுய்க்குழலூதியூதி ,, 3. 4. 4

"அட்டுக்குவி" பதிகம் முழுதும் கோவர்த்தன
வர்ணனம் ,, 3. 5

அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும்
நெய்யாறுமடங்க
பொட்டத்துற்றிப்......பொருமா கடல வண்ணன்
பொறுத்தமலை ,, 3. 5. 1

நன்பேரிட்டுக் கொண்டு தரணி தன்னில்
தாமோதரன் தாங்கு தடவரை தான் ,, 3. 5. 9

ஆயர் கூடி அமைத்தவிழவை—அமரர் தங்
கோனுக்கொழியக் கோவர்த்தனத்துச்
செய்தான்மலை ,, 4. 2. 4

தலைப்பெய்து குமுறிச் சலம் பொதி மேகஞ் சலசல
பொழிந்திடக்கண்டு
மலைப் பெருங்குடையால் மறுத்தவன் மதுரை
மாம்புருடோத்தமன் ,, 4. 7. 6

குன்றெடுத்தாகிரை காத்தவாயா ,, 4. 10. 9

வண்ணமால்வரையே குடையாக மாரிகாத்தவனே
மதுசூதா கண்ணனே ,, 5. 1. 8

குன்று குடையா வெடுத்தாய் குணம்
போற்றி திருப்பாவை, 24

காலிகளுய்ய மழைதடுத்துக் கொற்றக்
குடையாக வேந்திநின்ற
கோவர்த்தனத்தென்னை நாச். தி. 12. 8

மாண் குன்றமேந்தி தண்மாமலை தி. வி. 6

குன்றமொன்றால் புயல்வாய் இனநிரைகாத்த ,, 24

மால்வரையைக்கிளர்ந்து மறிதரக் கீண்டெடுத்தான் ,, 74

குன்று குடையாக ஆ காத்த கோவலனார் நெஞ்சே
புடைதான் பெரிதேபுவி பெ. தி. 74

மற்றாராலே கல்மாரி காத்தது தான் சி. தி. ம

துன்றுசகடத்தால் புக்கபெருஞ்சோற்றை
முன்னிருந்து முற்றத்தான் துற்றிய
தெற்றெனவும் பெ. தி. ம

வெற்பையொன்றெடுத்து ஒற்கமின்றியே
நிற்குமம்மான் சீர் நம். 1. 8. 4

பெருமலையெடுத்தான் பீடுறைகோயில ,, 2. 10. 4

மேவியன்றாநிரை காத்தவன் ,, 3. 2. 9

குன்றமேந்திக் குளிர்மழை காத்தவன் ,, 3. 3. 8

மலையையெடுத்துக் கன்மாரிகாத்துப்
பசுநிரைதன்னைத் தொலைவு தவிர்த்த பிரானை ,, 3. 5. 3

குன்றமொன்றால் மழைகாத்த பிரானை ,, 4. 5. 7

திறம்பாமல் மலையெடுத்தேனே யென்னும் ,, 5. 6. 5

இனவேய்மலை யேந்தினேன் யானேயென்னும் ,, 5. 6. 6

உண்ணவானவர் கோனுக்கு ஆயரொருப்படுத்த
வடிசிலுண்டதும் வண்ண மால்வரையை
யெடுத்து மழைகாத்ததும் ,, 5. 10. 5

குன்றமொன்றேந்தியதும் மம். 6. 4. 1

குன்றேந்திக் கோ நிரை காத்தவனென்னும் ,, 7. 2. 8

அப்பன் தீமழை காத்துக்குன்றமெடுத்தானே ,, 7. 4. 10

குன்ற மெடுத்த பிரான் அடியாரொடும் ,, 7. 4. 11

குன்றெடுத்தாநிரை மேய்த்து அவை காத்த ,, 7. 6. 2

மலையேந்திக் கல்மாரிதன்னைக் காத்த ,, 7. 6. 3

குன்றமெடுத்தபிரான் முறுவலெனதாவியடும் ,, 7. 7. 5

மழைக்கன்று குன்றமெடுத்து ஆநிரைகாத்தாய் ,, 9. 4. 3

பாழியந்தோளால் வரையெடுத்தான் பாதங்கள் ,, 10. 4. 8

கல்லெடுத்துக்கல்மாரிகாத்தாயென்றும் தி. நெ. தா. 13

குன்றெடுத்த தோளினனை ,, 29

கன்று மேய்த்துக் குன்றெடுத்தன்று நின்றான் கலி. 1. 3. 4

கடுத்தார்த்தெழுந்த பெருமழையைக்
கல்லொன்றேந்தி யினநிரைக்காத் தடுத்தான் ,, 1. 5. 5

கன்றி மாரிபொழிந்திடக் கடிதாநிரைக்கிடர் நீக்குவான்
சென்று குன்றமெடுத்தவன் ,, 1. 8. 3

அந்தமில் வரையால் மழைதடுத்தானை ,, 2. 3. 4

கோகுலங்கள் தளராமல் குன்றமேந்திக்காத்தானை ,, 2. 5. 4

மஞ்சுயர் மாமணிக்குன்றமேந்தி மாமழைகாத்து ,, 2. 8. 4

அடல்மழைக்கு நிரை கலங்கிட
வரைகுடையெடுத்தவன் ,, 3. 1. 8

மழை மா முது குன்றெடுத்து ,, 3. 2. 8

ஆயர் ஆநிரைக்குஅன்றிடர் தீர்ப்பான் கூடிய
மாமழைகாத்த ,, 3. 3. 1

மலங்க வருமழை காப்பான் உய்யப்பருவரை தாங்கி
ஆநிரைகாத்தான் கலி. 3. 3. 6

வரையெடுத்த தோளாளா ,, 3. 6. 5

காலிகள் முன் காப்பான் குன்றதனால் மழைதடுத்து ,, 3. 10. 8

அண்டரானவர் வானவர் கோனுக்கென்று அமைத்த
சோறது வெல்லா முண்டு
கோநிரைமேய்த்து அவை காத்தவன் ,, 4. 2. 3

மன்னுகாம்புடைக்குன்றமேந்திக் கடுமழை
காத்தவெந்தை ,, 4. 5. 1

குன்றால்குளிர் மாரிதடுத்துகந்தானே ,, 4. 7. 3

வெற்பால் மாரி பழுதாக்கி ,, 5. 1. 4

குடையா விலங்கல் கொண்டேந்தி
மாரி பழுதாநிரைகாத்து ,, 5. 1. 7

பனிகாத்தவம்மானை ,, 5. 6. 1

ஆயனாயன்று குன்றமொன்றெடுத்தான் ,, 5. 7. 6

குடையா வரை யொன்றெடுத்துஆயர்
கோவாய்நின்றான் ,, 6. 7. 7

வரையெடுத்து மழைதடுத்த
குன்றாரும் திரள்தோளான் ,, 6. 9. 4

குடையா வரையால் நிரை முன் காத்தபெருமான் ,, 6. 10. 5

குன்றுகுடையாவெடுத்த அடிகளுடைய திருநாமம் ,, 6. 10. 7

கடுங்கால் மாரிகல்லேபொழிய அல்லேயெமக்-
கென்று படுங்கால
நீயே சரணென்று ஆயரஞ்ச அஞ்சாமுன்
நெடுங்காற்குன்றம் குடையொன்றேந்தி
நிரையைச்சிரமத்தால நடுங்காவண்ணம்
காத்தான் நாமம்நமோ-நாராயணமே ,, 6. 10. 8

| | |
|---|---|
| குன்றால் மாரி தடுத்தவனை | கலி. 7. 6. 4 |
| டண்டு ஆ துய்ய வோர் மால் வரை யேந்தும் பண்பாளா | ,, 7. 7. 5 |
| வரையெடுத்த பெருமாலுக்கு இழந்தேனென் வரிவளையே | ,, 8. 3. 1 |
| குன்றால் மாரி பழுதாக்கி | ,, 8. 6. 9 |
| புயலுறுவரை மழைபொழிதர மணிநிரை மயலுற வரை குடையெடு விய நெடியவர் | ,, 8. 7. 3 |
| ஆநிரைக்கழிவென்று மாமழை நின்று காத்துகந்தான் | ,, 9. 10. 7 |
| ஆயர் அன்று நடுங்க வாநிரை காத்த ஆண்மை கொலோ | ,, 10. 9. 2 |
| கூவாய் பூங்குயிலே குளிர்மாரி தடுத்துகந்த | ,, 10. 10. 3 |
| குன்றமொன்றெடுத்தேந்தி மாமழை அன்று காத்த வம்மான் | ,, 11. 1. 1 |
| குன்றமெடுத்து மழைதடுத்து | ,, 11. 2. 1 |
| குன்றமெடுத்தாநிரை காத்தவன்தன்னை | ,, 11 8. 10 |

(கோவர்த்தநோத்தரணம் முடிந்தது)

## ராஸக்கிரீடை

| | |
|---|---|
| குரவை-கோத்து | பொ. 54 |
| கோலக்குரவை கோத்ததும் | குல. 7. 9 |
| சுரிகுழலாரோடு நீபோய்க்கோத்துக் குரவை பிணைந்திங்கு வந்தால் | பெரி. 2. 3. 5 |
| குரவை கோத்த குழகனை மணிவண்ணனை | நம். 3. 6. 3 |

வல்லிசேர் நுண்ணிடை ஆய்ச்சியர் தம்மொடும்
கொல்லைமை செய்து குரவை பிணைந்தவர் நம். 4 2. 2

மதுவை வார்குழலார் குரவை பிணைந்த குழகும் ,, 5. 10. 2

குரவையாய்ச்சியரோடு கோத்ததும் ,, 6. 4. 1

கோத்தங்காயர் தம்பாடியில் குரவைபிணைந்த
வெங்கோவலன் கலி. 1. 8. 4

குரவை முன்னே கோத்தானை ,, 2. 5. 4

குரவை கோத்து ,, 7. 8. 8

குரவை முன் கோத்த ,, 9. 8. 6

ஆடியசைந்து ஆய்மடவாரொடு நீபோய்
கூடிக்குரவைபிணை கோமளப் பிள்ளாய் ,, 10 8. 9

இளையாரொடும் மன்றில் குரவை பிணைந்த மால்
என்னைமால் செய்தான் ,, 11. 2. 1

## ஜலக்கிரீடை

தடந்தாமரைப் பொய்கைபுக்கான் ,, 3 8. 5

## குடமாடுகூத்தன்

குடம்......ஆடி பொ. 54

கொண்டு குடமாடிக் கோலமாய் மேவி ,, 98

குடமாடுந்த கூத்தனாய் நின்றான் பே. 13

குடங்கலந்த கூத்தனாய கொண்டல் வண்ண தி. ச. வி. 38

குடமாட்டும் குல. 7. 9

முதுமணற்குன்றேறிக் கூத்துவந்தாடிக் குழலாலிசைபாடி
வாய்த்தமறையோர் வணங்க பெரி. 1. 9. 8

ஆடியாடி அசைந்தசைந்திட்டு அதனுக்கேற்ற
கூத்தையாடி ஓடியோர்டிப்போய் விடாதே ,, 2. 2. 10

| | |
|---|---|
| குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாட வல்ல<br>வெங்கோவே | பெரி. 2. 7. 7 |
| குடமாடுகூத்தா | ,, 2. 9. 6 |
| குடத்தையெடுத்தேற விட்டுக் கூத்தாட<br>வல்லவெங்கோவே | நாச். தி. 3. 6 |
| குடமாடுகூத்தன் கோவிந்தன் | ,, 10. 7 |
| குடந்தைக்கிடந்தகுடமாடி | ,, 13. 2 |
| குடமாடி—குடமாடிய பெருமான் | தி. வி. 38 |
| சுழலக்குடங்கள் தலைமேலெடுத்துக் கொண்டாடி | பெ. தி. 31 |
| சீரார் குடமிரண்டேந்திச் செழுந்தெருவே<br>ஆராரெனச்சொல்லி யாடுமதுகண்டு | சி. தி. ம |
| மங்கையர் தம்கண்களிப்பக்கூத்தனாய்ப்<br>போத்தும் குடமாடி | பெ. தி. ம |
| கூறுதலொன்றாராக்குடக்கூத்தவம்மானை | நம். 2. 5. 11 |
| கோவிந்தன்-குடக்கூத்தன்-கோவலன் | ,, 2. 7. 4 |
| குடக்கூத்தனை | ,, 3. 6. 3 |
| மணிவண்ணனைக் குடக் கூத்தனை | ,, 3. 6. 7 |
| குடக் கூத்தனார் | ,, 4. 2. 5 |
| கூத்தர் குடமெடுத்தாடில்<br>கோவிந்தனாமெனா வோடும் | ,, 4. 4. 6 |
| குடமாடியை—வானக்கோனை | ,, 4. 5. 9 |
| நின் குடக் கூத்தனுக் காட் செய்வதே | ,, 4. 10. 10 |
| எம் கூத்தாவோ | ,, 7. 6. 2 |
| எம் கூத்தாவோ | , 7. 6. 3 |
| கொண்டல் வண்ணா குடக் கூத்தா | ,, 8. 5. 6 |

| | |
|---|---|
| வைகுந்தம் கோயில் கொண்ட குடக் கூத்தவம்மானே | நம். 8. 6. 5 |
| எம் குடக் கூத்தர்க் கென் தூதாய் | ,, 9. 7. 1 |
| ஏத்துமின் நமர்காள் - என்று தான்குடமாடு கூத்தனை | ,, 10. 1. 11 |
| மன்றமரக் கூத்தாடி மகிழ்ந்தாயென்றும் | தி. நெ. தா. 16 |
| ஆடு கூத்தனுக்கின்றடிமைத் தொழில் பூண்டாயே | கலி. 2. 1. 9 |
| குடமாடு கூத்தன் தன்னை | ,, 2. 5. 4 |
| கூத்தனென வருகின்றான் | ,, 3. 3. 1 |
| தண் குடந்தைக் குடமாட | ,, 3. 6. 8 |
| குடமாடு கூத்தன் | ,, 3. 10. 8 |
| குடமாடி மதுசூதன் | ,, 5. 5 6 |
| தயிருண்டு குடமாடு | ,, 5. 10. 1 |
| மலலா - குடமாட—மது சூதனே | ,, 6. 3. 9 |
| மன்றாரக் குடமாடி | ,, 6. 9. 4 |
| குடமாடிய கூத்தனை | ,, 7. 3. 3 |
| கோவலர் கூத்தன் குறிப்பறிந்து | ,, 9. 5. 8 |
| குடங் கலந்தாடி | ,, 9. 8 6 |
| குடமாட கொட்டாய் | ,, 10. 5. 6 |
| மன்றின் மலிந்து கூத்து வந்தாடி | ,, 10. 9. 2 |
| கொட்டாய் பல்லிக் குட்டி குடமாடி— | ,, 10. 10. 4 |
| பறை கறங்கக் கண்டவர்தம் கண்களிப்ப மன்றில் மரக்கால் கூத்தாடினான் | ,, 11. 5. 6 |

(குடமாடு கூத்து முடிந்தது)

"அரிஷ்டாசுர—(எருது) பங்கம்"

ஏர் விடை செற்று — பெரி 2. 3. 10

கஞ்சனும் எருதும் வஞ்சனையின் மடிய — ,, 4. 3. 2

எருதடர்த்த வெந்தை — கலி. 4. 5. 4

அம்பரமேழு மதிரு மிடிகுரல் அங்கனற்
செங்கணுடை வம்பவிழ் கானத்து மால்விடையோடு
பிணங்கி நீ வந்தாய் போலும் — ,, 10. 7. 13

கேசிவதம்

மாவாய் பிளந்து — பொ. 27

முன்னொருநாள் மாவாய் பிளந்த மகன் — பூ. 28

கூந்தல்வாய் கீண்டானை — ,, 93

மாவலவுயக் கீண்ட மணிவண்ணன் — பே. 42

அன்று துரகவாய் கீண்ட துழாய்முடியாய் — ,, 47

நீயன்றே மாவாயுரம் பிளந்து — ,, 48

துரகத்தைவாய் பிளந்தான தொட்டு — ,, 48

காய்த்தநீள்...... ..மாபிளந்து — தி. ச. வி. 37

காய்சினந்த........சுமாபி கேசிதேநுகள் — ,, 107

மாவினை வாய் பிளந்துகந்தமாலை — குல. 1. 4

கருளுடைய......கடியமாவும் — பெரி. 4. 9. 3

மாவாய் பிளந்தானை — திருப்பாவை 8

மாவாய் பிளந்தார் மனம் வலிதே கொல — பெ. தி. 50

வெம் மா வாய் கீண்ட—செம்மா கண்ணனே — நம். 1 8. 2

மாவாய்பிளந்து — ,, 2. 1. 10

வெம்மாபிளந்தான் தன்னை — ,, 4. 5. 1.

மாய மாவினை வாய் பிளந்ததும் நம். 5. 10. 2

துரங்கம்வாய் பிளந்தானுறை

தொலைவில்லை மங்கலமென்று ,, 6. 5. 9

மாவை வல் வாய் பிளந்த மதுசூதற்கு ,, 6. 8. 7

மா கீண்டகைத்தலத்தென் மைந்தா தி. நெ. தா. 13

பரிவாய்கீண்ட சீரானை கலி. 2. 5. 1

பரியைக்கீறி ,, 2. 10 7

மாவாயினங்கம் மதியாது கீறி ,, 3. 2. 8

ஒக்கலித்திட்டு ஆடல்நன் மாவுடைத்து ,, 3. 3. 1

வெவ்வாய மா கீண்டு...விண்ணவர்கோன் ,, 3. 4. 5

வெஞ்சினத்தரி பரிகீறிய ,, 4. 2. 7

மாத்தொழில் மடங்கச்செற்று ,, 4. 5. 3

மாவாய் பிளந்து ,, 5. 1. 3

வேங்கடத்தரியைப் பரிகீறியை ,, 7. 3 5

துரங்கம் படக்கீறிய தோன்றலை ,, 7. 10. 6

பரி கீறிய வப்பனை ,, 7. 10. 7

துரங்கம் வாய் கீண்டுகந்தானது ,, 8. 2. 7

கதமா—மடிவித்து ,, 8. 6. 8

பதமிகு பரியின் மிகுசினம் தவிர்த்த ,, 9. 8. 8

அரிமாச்செகுத்து ,, 9. 10. 8

கரிந்திட்ட செங்கேழ் உளைப் பொங்கரி மாத்

தொலையப் பிரியாது சென்றெய்தி, எய்தாது

இரிந்திட்டிடங்கொண்டு அடங்காத

அதன்வாய் இருகூறு செய்த பெருமான் ,, 10. 6. 9

மா வாய் கீண்ட மணிவண்ணனை வர , 10. 10. 3

அரிமாச்செகுத்து — கலி. 11. 2. 2

### கூனி கூன் நிமர்த்தது

கூனே சிதைய உண்டைவில் நிறத்தில்
தெறித்தாய் — நம். 1. 5. 5

நாறிய சாந்தம் நமக்கிறைநல்கென்னத்
தேறியவளும் திருவுடம்பில் பூச
ஊறிய கூனினை உள்ளேயொடுங்க...
உருவினயச்சோ — பெரி. 1. 8. 4

சாந்தணிதோட் சதுரன்மலை — ,, 4. 2. 6

ஒருசால் நின்றுண்டை கொண்டோட்டி
வன் கூன்நிமிர நினைந்த பெருமான் — கலி. 10. 6. 2

### குவலயாபீட நிரசனம்

வென்றிதழ் களிற்றை ஊன்றிப் பொருதுடைவு
கண்டான் — பெ. 18

கொலையானைப் போர்க்கோடொசித்தனவும் — ,, 27

அடல்வேழம் இறுத்து — ,, 54

கோணகங் கொம்பொசித்தகோ — பூ. 68

அதவிப்போர் யானையொசித்து — ,, 89

சினமா மதனிகற்றின் திண்மருப்பைச் சாய்த்து — பே. 43

சகடமுதைத்துப் பகடுந்தி — ,, 45

காய்ந்து கரியுருவம் கொம்பொசித்தான் — ,, 65

யானை பிடித்தொசித்து — நான். தி. 33

கடங் கலந்த வன் கரி மருப்பொசித்து — தி. ச. வி. 38

ஆனைகாத்தொரானை கொன்று — ,, 40

வெஞ்சினத்த வேழ வெண் மருப்பொசித்து — ,, 43

பொற்றையுற்ற முற்றல் யானை
போரெதிர்ந்து வந்ததை
பற்றியுற்று மற்றதன் மருப்பொசித்த பாகனூர்—
அரங்கமே திருச்சந்த விருத்தம் தி. ச. வி. 52

மத்தயானை மத்தகத்து—உரங்கெடப்புடைத்து
ஓர் கொம்பொசித்து உகந்தவுத்தமா ,, 58

கவளமால்யானை கொன்ற திருமாலை. 45

வெங்கட்டிண்களிறடர்த்தாய் குல. 5. 5

இருங்கைம் மதகளிறு ஈர்க்கின்றவனை பெரி. 1. 2. 7

வேழமுமேழ்விடையும்......வென்றுவருமவனே ,, 1. 5. 3

தூங்கமதக்கரியின் கொம்புபறித்தவனே ,, 1. 5. 6

பொருகரியின் கொம்பொசித்தாய் ,, 2. 7. 5

கும்பக்களிறட்டகோவே ,, 2. 8. 8

கொலையானைக் கொம்புபறித்து ,, 4. 1. 3

கஞ்சன்தன் ஒருவாரணமுயிருண்டவன் ,, 4. 2. 5

களிறும்-மடுதும்-வஞ்சனையின் மடிய ,, 4. 3. 2

வேழத்தை முறுக்கி-மேலிருந்தவன் தலைசாடி ,, 4. 7. 7

கருளுடைய......கதக்களிறும் ,, 4. 9. 3

குஞ்சரம் வீழக்கொம்பொசித்தானே ,, 5. 1. 5

காரணு களிறட்டபிரானே ,, 5. 1. 8

மருப்பொசித்தாய் என்றென்றுன் வாசகமே ,, 5. 4. 7

வல்லானை கொன்றானை திருப்பாவை. 15

அங்கோர் கரியலற மருப்பினையொசித்து—
மணிவண்ணற்கு நாச். தி. 1. 10

ஓடைமாமதயானை உதைத்தவன் ,, 4. 5

மருப்பொசித்த மாதவன் தன் வாய்ச் சுவையும் நாச். தி. 7. 1

காட்டை நாடி தேனுகனும் களிறும் புள்ளும்
உடன்மடிய வேட்டையாடி வருவானை ,, 14. 9

ஓரானை கொம்பொசித்தோரானை
கோள் விடுத்த சீரானை சி. தி. ம

வேழமருப்பை யொசித்தான் நம். 1. 9. 2

வாரணத்தை மருப்பொசித்த பிரான் என்மாதவனே ,, 2. 7. 2

பட்டமுடையாள் மதகளிறட்டவன் பாதம் பணிமினே ,, 4. 1. 4

குல நல் யானை மருப்பொசித்தாய் ,, 4. 3. 1

கவளக்கடாக் களிறட்டபிரான் ,, 4. 6. 5

களிறட்ட தூமுறுவல் தொண்டைவாய்ப்பிரானை ,, 5. 3. 8

நீள்நெடுங்கைச் சிகரமாகளிறட்டதும் ,, 6. 4. 3

வார்கடாவருவி யானை மாமலையின்
மருப்பிணைக் குவடிறுத்துருட்டி
ஊர்கொள்திண் பாகனுயிர் செகுத்து ,, 8. 4. 1

செம்முகத்த களிறட்ட
பொன்னாழிக்கை யென்னம்மான் ,, 8. 10. 6

ஆரும்மதயானை அடர்த்தவன்தன்னை ,, 9. 4. 11

வாரணந்தொலைத்த ,, 10. 5. 2

மதமிக்க கொலையானை மருப்பொசித்தான் ,, 10. 6. 6

கரிமுனிந்த கைத்தலமும் கண்ணும் வாயும் தி. நெ. தா 25

போரானைக் கொம்பொசித்த போரேற்றினை கலி. 2. 5. 1

படுமதத்த களிற்றின் கொம்பு பறித்தானை ,, 2. 5. 6

வெம்புசினத்தடல் வேழம் வீழ
வெண் மருப்பொன்று பறித்து
இருண்ட வம்புதம் போன்றிவரார் கொல் ,, 2. 8. 3

ஆனை அஞ்ச அதன் மருப்பன்று வாங்கும்
ஆயர்கோல் கலி. 2. 8. 4

இருங்கைம் மா கரி முனிந்து ,, 2. 10. 7

மேவு சினத்தடல் வேழம் வீழமுனிந்து ,, 3. 3. 7

வேழம் அட்ட விண்ணவர்கோன் ,, 3. 4. 5

போரானைக் கொம்பொசித்த 3. 6. 6

அண்டர்கள் முன்கண்டு மகிழ்வெய்த
கும்பமிகு மதயானை மருப்பொசித்து ,, 3. 10. 3

கும்பமிகு மதயானை பாகனொடுங்குலைந்து வீழ
கொம்பதனைப் பறித்தெறிந்த கூத்தன் ,, 4. 1. 9

பருங்கை யானையின் கொம்பினைப் பறித்து
அதன் பாகனைச் சாடிப்புக்கு ,, 4. 2. 4

வெஞ்சினக்களிறும்......வெகுண்டிறுத்து ,, 4. 3. 7

தாங்கருஞ் சினத்து வன்தாள் தடக்கைம்மா
மருப்பு வாங்கி ,, 4. 5. 4

மாத்தமர் பாகன் வீழ மதகரி மருப்பொசித்தாய் ,, 4. 6. 7

கானார் கரி கொம்பது ஒசித்த களிறே ,, 4. 7. 4

கவளயானைக் கொம்பொசித்த கண்ணனென்றும் ,, 4. 8. 1

கஞ்சன்விட்ட வெஞ்சினத்த களிறடர்த்த காளை ,, 4. 8. 2

புகுவாய் நின்ற போதகம் வீழப்பொருதானூர் ,, 6. 5. 6

பூணுதனலும் தறுகண் வேழம்மறுக
வளைமருப்பைப் பேணான் வாங்கி ,, 6. 10. 3

கும்பமிகு மதவேழம் குலையக் கொம்புபறித்து ,, 7. 8. 8

ஊடேறு கஞ்சனொடு......ஒண்கரியும்......செற்ற ,, 7. 8. 9

போரானைக் கொம்பொசித்த
புட்பாகனென்னம்மான் ,, 8. 1. 4

மழைமதத்த சிறுதறுகண்
கரிவெருவ மருப்பொசித்தாற்கு கலி. 8. 3. 2

கருந்தாட்களிறொன்றொசித்தான் ,, 8. 6. 6

மதகரியும்......மடிவித்து ,, 8. 6. 8

தூம்புடைக்கை வேழம் வெருவ மருப்பொசித்த ,, 9. 2. 6

மற்றோர் சினவேழம் கொலையார் கொம்பு
கொண்டான் ,, 9. 6. 10

பொருமா கரி கொம்சொசித்து ,, 9. 9. 7

ஆனைகாய்ந்து ,, 9. 10. 8

ஆனைவாட்டியருளும் ,, 10. 1. 6

கம்ப மா களிறஞ்சிக்கலங்க ,, 10. 1. 9

அன்னநடை மடவாய்ச்சி வயிறடித்தஞ்ச
அருவரைபோல்
மன்னுகருங்களிற்றுருயிர் வவ்விய மைந்தனை ,, 10. 7. 14

ஆங்கு வேழத்தின் கொம்பு கொண்டு ,, 11. 2. 2

கொலைகெழு செம்முகத்த களிறொன்று கொன்று ,, 11. 4 10

(குவலயாபீட நிராஸம் முடிந்தது)

## மல்ல நிராஸம்

மல்-அட்டு பொ. 54

மற்பொன்ற நீண்டதோள் பே. 69

மற்பொரு தோளுடை வாஸுதேவா குல. 6. 6

மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா தி. ப. 1

எதிர் வந்தமல்லை அந்தரமின்றி அழித்தாடிய
தாளிணையாய் பெரி. 1. 5. 6

இருமல்லபோலெதிர்ந்தமல்லர்
இருவரங்கமெரிசெய்தாய் பெரி. 2. 2. 8

தெருவின்கண் தீமைகள் செய்துக்
சிக்கெனமல்லர்களோடு
பொருது வருகின்ற பொன்னே ,, 2. 7. 6

மல்லரையட்டவன் பின்போய்
மதுரைப்புறம்புக்காள் ,, 3. 8. 1

ஏவிற்றுச் செய்வான் ஏன்றெதிர்த்து வந்த
மல்லரை சாவத்தகர்த்த ,, 4. 2. 6

மற்பொருதெழ ,, 4. 7. 7

உருளுடைய... ..மல்லரையுமுடைய ,, 4. 9. 3

மல்லடர்த்தாய் என்றென்றுன் வாசகமே ,, 5. 4. 7

மல்லரை மாட்டிய திருப்பாவை. 6

மற்பொருந்தா மற்களமடைந்த
மதுரைப்புறத்து நாச். தி. 12. 1

வலியமென நினைந்து வந்தெதிர்ந்த
மல்லர் வலியமுடியிடிய வாங்கி
வலிய நின்பொன்றுழிக்கையால்
புடைத்திடுதி பெ. தி. 41

அயர்ப்பா-யயராப்பாய் நெஞ்சமே சொன்னேன்......
செயற்பால அல்லவே செய்கிறுதி நெஞ்சமே! யஞ்சினேன்
மல்லர்நாள் வவ்வினனை வாழ்த்து ,, 83

நிகரில மல்லரைச் செற்றதும் நம். 6. 4. 3

மற்பொருதோளுடை மாயப்பிரானுக்கு ,, 6. 6. 10

ஊனுடைமல்லர் ததர்ந்தவொலி ,, 7. 4. 5

அரங்கின் மல்லரைக் கொன்று ,, 8. 4. 1

| | |
|---|---|
| மல்லடர்த்து மல்லரையன்றட்டாயென்றும் | தி. நெ. தா. 13 |
| மல்லேயட்டு | கலி. 2. 10. 7 |
| மல்லரைக்கொன்று | ,, 3. 3. 1 |
| ஒருங்க மல்லரைக்கொன்று | ,, 4. 2. 4 |
| வில்லொடு மல்லும் வெகுண்டிறுத்த | ,, 4. 3. 7 |
| மல்லரையட்டுமாா | ,, 4. 6. 6 |
| மல்லடர்த்து | ,, 5. 1. 3 |
| கஞ்சனைஞ்சங் கடுமல்லரும் காவிலுல துஞ்சவென்ற | ,, 5. 4. 7 |
| மல் அமருள் மல்லர்மாள மல்லடர்த்தமல்லா | ,, 6. 2. 6 |
| வில்லார்விழவில வடமதுரை விரும்பி விரும்பா மல்லடர்த்து | ,, 6. 7. 5 |
| ஊடேறு கஞ்சனொடு மல்லும்......செற்ற | ,, 7. 8. 9 |
| மல்லருயிரும்......மடிவித்து | ,, 8. 6. 8 |
| மல்லே பொருத திரடோள் மணவாளீர் | ,, 10. 8. 7 |

## கம்ஸ வதம்

| | |
|---|---|
| கடந்தது கஞ்சனை முன்னஞ்ச | பொ. 39 |
| கதவிக்கதஞ் சிறந்த கஞ்சனை முன் காய்ந்து | பூ. 89 |
| அடியால் முன் கஞ்சனைச் செற்று | ,, 92 |
| முன் கஞ்சைக் கடந்தானை நெஞ்சமே காண் | பே. 34 |
| கஞ்சனைக் கடிந்து | தி. ச. வி. 43 |
| கஞ்சன் நாள்கவர் கருமுகிலெந்தாய் | குல. 7. 10 |
| மல்லே மாநகர்க்கிறையவன் தன்னை வான் செலுத்தி | ,, 7. 11 |

திருமதுரையுட் சிலை குனித்து தி. ப. 10

(கம்ஸனது வில் முறித்தது)

வன்கஞ்சன் மாளப் புரட்டி பெரி. 2. 1. 4

கஞ்சனையுன் வஞ்சனையால் வலைப்படுத்தாய் ,, 2. 2. 4

கறுத்திட்டெதிர் நின்றகஞ்சனைக் கொன்றான் ,, 2. 6. 3

கஞ்சனைக்கால் கொடுபாய்ந்தாய் ,, 2. 7. 6

கொடுங்கஞ்சன் நெஞ்சினிற் கூற்றே ,, 2. 8. 8

கஞ்சனைக்காய்ந்த ,, 3. 2. 1

கஞ்சனும் காளியனுங்களிறு மருது மெருதும்
வஞ்சனையின் மடிய வளர்ந்த மணிவண்ணன் ,, 4. 3. 2

எழப்பாய்ந்தரையனை யுதைத்தமால் ,, 4. 7. 7

கொடுமைக்கஞ்சனைக் கொன்று ,, 5. 1. 4

கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே திருப்பாவை, 25

கஞ்சன் வலை வைத்தவன்று காரிருளெல்லில்
பிழைத்து நெஞ்சு துக்கஞ் செய்யப் போந்தாய் நாச். தி. 3. 9

கஞ்சனை வஞ்சனையிற் செற்றவன் ,, 4. 6

வென்றிவேல் விறற் கஞ்சனும்வீழ ,, 4. 7

கஞ்சைக் காய்ந்த கருவிலலி ,, 13. 3

விறல் கஞ்சனை வஞ்சனை செய்தீர
உம்மைத் தஞ்சமென்று இவள் பட்டனவே நம். 2. 4. 8

சாதுசனத்தை நலியுங்கஞ்சனைச் சாதிப்பதற்கு
ஆதியஞ் சோதியுருவை அங்கு
வைத்திங்குப் பிறந்த ,, 3. 5. 5

கஞ்சனை வஞ்சித்து ,, 3. 8. 9

கஞ்சனைத்துஞ்ச வஞ்சம் செய்ததும் நம். 6. 4. 5
கூற்றியல் கஞ்சனைக் கொன்று ,, 7. 6. 10
மாடமீமிசைக் கஞ்சனைத் தகர்த்த ,, 8. 4. 1
கடியனைக் கஞ்சனைக் கொன்ற பிரான்றன்னை ,, 9. 6. 11
கஞ்சன் மாளக்கண்டு முன்னண்டமாளும் தி. கு. தா. 1
விற்பெருவிழவும் கஞ்சனும் மல்லும் வேழமும்
பாகனும் வீழச் செற்றவன் கலி. 2. 3. 1
முன் நண்ணாத கஞ்சைக் கடந்தவனூர் ,, 2. 6. 7
வஞ்சகம் செய் கஞ்சனுக்கு நஞ்சானானை ,, 2. 10. 7
கஞ்சன் குஞ்சி பிடித்தடித்த பிரான் கோயில் ,, 3. 10. 3
வலிமிக்க கஞ்சனுயிரது வுண்டு ,, 3. 10. 9
கஞ்சனை புதைத்தவனுறை கோயில் ,, 4. 2. 4
கஞ்சனைக் காய்ந்த காளையம்மானை ,, 4. 3. 7
கஞ்சனை மலைந்து கொன்று ,, 4. 6. 6
கஞ்சனைக்காய்ந்த ,, 4. 10. 4
கஞ்சனெஞ்சுங் காலினால் துஞ்சவென்ற ,, 5. 4. 7
தரியாது கஞ்சனைக்கொன்று ,, 5. 6. 6
கல்லார்திரடோள் கஞ்சனைக் காய்ந்தான் ,, 6. 7. 5
கஞ்சனைக் காய்ந்தானை ,, 7. 6. 5
கறுத்துக்கஞ்சனை யஞ்ச முனிந்தாய் ,, 7. 7. 7
ஊடேறு கஞ்சனோடு மல்லும் வில்லும்
ஒண்கரியுமுருள்சகடு முடையச் செற்ற ,, 7. 8. 9
கஞ்சனைத்துஞ்ச வஞ்சித்த வஞ்சனை ,, 7. 10. 8
கஞ்சனையஞ்ச முன்கால் விசைத்த காளையராவர் ,, 9. 2. 6
கஞ்சனை முன்னம் கடந்த நின் கடுந்திறல் தானோ ,, 10. 9. 3

மல்லொடு கஞ்சனும் துஞ்ச
வென்றமணிவண்ணன் கலி. 11. 2. 3

(கம்ஸ வதம் முடிந்தது)

## கண்ணன் அத்யயநம்

காதலால் மறை நான்கும் முன்னோதிய பட்டனை ,, 7. 3. 6

## ஸாந்தீபினிபுத்ரனை மீட்டுக்கொடுத்தது

மாதவத்தோன் புத்திரன் போய்
மறிகடல்வாய்மாண்டானை
ஓதுவித்த தக்கணையா வுருவுருவே கொடுத்தான். பெரி. 4. 8. 1

ஓதுவாய்மையு முவனியப்பிறப்பும்
உனக்கு முன் தந்த வந்தணனொருவன்
காதலனென்மகன் புகலிடங்காணேன் கண்டு
நீ தருவாயெனக்கென்று......
குறைமுடித்தவன் சிறுவனைக்கொடுத்தாய் கலி. 5. 8. 7

முந்துநூலும் முப்புரிநூலும் முன்னீந்த அந்தணாளன்
பிள்ளையை அந்நான்றளித்தானூர் ,, 6. 5. 7

## வைதிகன் பிள்ளைகளை மீட்டுக் கொடுத்தது

தப்பின பிள்ளைகளைத்தனமிகு சோதி புகத்
தனியொரு தேர்கடவித் தாயொடு கூட்டிய பெரி. 1. 5. 7

பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை
நால்வரையும் இறைப்பொழுதிற் கொணர்ந்து
கொடுத்து ஒருப்படுத்தவுறைப்பன் ,, 4. 8. 2

படர்புகழ்ப்பார்த்தனும்வைதிகனும்
உடனேறத் திண்டேர்கடவிச்
சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில்
வைதிகன் பிள்ளைகளை
உடலொடும் கொண்டு கொடுத்தவனைப் பற்றி
ஒன்றும் துயரிலனே நம். 3. 10. 5

கலக்கவேழ்கடலேழ் மலை உலகேழும்
கழியக்கடாய் உலக்கத்தேர்கொடு சென்றமாயமும் ,, 6. 4. 9

வேதவாய் மொழியந்தண னொருவன்
எந்தை நின் சரணென்னுடைய மனைவி
காதல் மக்களைப் பயத்தலுங்காணுள்
கடியதோர் தெய்வம் கொண்டொளிக்கு
மென்றழைப்ப உன்மக்கள் மற்றிவரென்று
கொடுத்தாய் கலி. 5. 8. 8

### காலநேமிவதம்

காலநேமிகாலனே தி. ச. வி. 31

கடங்கலந்த...காலநேமிகாலனே ,, 38

சாலி வேலி.....கால நேமி வக்கரன்
கரன்முரன்.....காலனோடுகூட வில் குனித்த
விற் கை வீரனே தி. ச. வி. 59

கடைந்து பாற்கடல்.....கால நேமியைக் கடிந்து ,, 81

கறுத்தெதிர்ந்த காலநேமி காலனோடு கூடவன்று
அறுத்த வாழி சங்கு தண்டு வில்லும்
வாளு மேந்தினாய் ,, 106

### நாரதர் கண்ட க்ருஷ்ண வைபவம்

ஆமையாய்க் கங்கையாய்
ஆழ்கடலாயவனியாயருவரைகளாய்
நான்முகனாய் நான்மறையாய் வேள்வியாய்த்
தக்கணையாய்த்தானுமானான்
சேமமுடை நாரதனார் சென்று சென்று
துதித் திறைஞ்சக் கிடந்தான் கோயில் பெரி. 4. 9. 5

## அர்ஜுனன் கண்ட க்ருஷ்ண வைபவம்

தீர்த்தன் உலகளந்த சேவடிமேல் பூந்தாமம்
சேர்த்தி யவையே சிவன் முடிமேல்
தான் கண்டு பார்த்தன் தெளிந்தொழிந்த
பைந்துழாயான் பெருமை
பேர்த்து மொருவரால் பேசக் கிடந்ததே — நம். 2. 8. 6

## சீமாலிகன்வதம்

சீமாலிகனவனோடு தோழமைகொள்ளவும் வல்லாய்
சாமாறவனை நீயெண்ணிச் சக்கரத்தால்
தலை கொண்டாய் — பெரி. 2. 7. 8

## துவராபதி மன்னன்

பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு
பௌவமெறி துவரை
எல்லாருஞ்சூழச் சிங்காசனத்தே யிருந்தான் — ,, 4. 1. 9

பதினாறு மாயிரவர் தேவிமார்பணிசெய்ய
துவரையென்னு மதில்
நாயகராகி விற்றிருந்த மணவாளர் — ,, 4. 9. 4

துவரைப் பிரானுக்கே சங்கற்பித்து — நாச். தி. 1. 4

விரைசூழ் துவராபதிக் காவலன் — ,, 4. 8

பதினாறுமாயிரவர் தேவிமார் பார்த்திருப்ப
மதுவாயிற்கொண்டாற்போல்
மாதவன்தன்வாயமுதம்
பொதுவாகவுண்பதனைப் புக்கு நீ யுண்டக்கால் — ,, 7. 9

துவராபதி யெம்பெருமான் — ,, 9. 8

சூட்டுயர்மாடங்கள் சூழ்ந்து தோன்றும்
துவராபதிக்கென்னையுய்த்திடுமின் — ,, 12. 9

மன்னப்படுமறைவாணனை வண்துவராபதி
மன்னனை — நம். 4. 6. 10

வண்துவராபதி மன்னன் மணிவண்ணன் ,, 5. 3. 6

## த்ரௌபதி கூந்தலை முடிப்பித்துப் பாண்டவர்களுக்கு ராஜ்யம் கொடுத்தது

மைத்துனன் மார் காதலியை மயிர்
முடிப்பித்தவர்களையே மன்னராக்கி பெரி. 4. 9. 6

## ருக்மிணி பரிணயம்
## ருக்மீ—சிசுபாலன் பங்கம்

கண்ணாலங்கோடித்துக் கன்னி தன்னைக்
கைப் பிடிப்பான்
திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து
அண்ணாந்திருக்கவே
ஆங்கவளைக் கைப்பிடித்த பெண்ணாளன்
பேணுமூர் - பேருமரங்கமே நாச். தி. 11. 9

பேசி ஏசிநுருய்ந்து போனார் பேசினேன்
ஈசமாட்டேன் தி. கு. தா. 17

அன்றங்கமர் வென்றுருப்பிணி நங்கை
அணிநெடுந்தோள் புணர்ந்தான் நம். 7. 10. 6

அன்றின்னாதன செய் சிசுபாலனும் நாச். தி. 4. 7

வைது நின்னை வல்லவாபழித்தவர்க்கும்... தி. ச. வி. 11

பலபலநாழஞ் சொல்லிப் பழித்த சிசுபாலன்றன்னை
அலவலைமை தவிர்த்த அழகனலங்காரன் மலை பெரி. 4. 3. 5

வாரேறு கொங்கையுருப்பிணியை வலியப்
பிடித்துக் கொண்டு தேரேற்றிச் சேனை நடுவு
போர் செய்யச் சிக்கெனக்கண்டார் ,, 4. 1. 5

உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக்கொண்டு
விருப்புற்றங்கேக விரைந்தெதிர் வந்து
செருக்குற்றான் வீரஞ்சிதையத்-தலையைச்
சிரைத்திட்டான் வன்மையைப்பாடிப்பற ,, 3. 9. 3

உருப்பிணி நங்கைதன்னை மீட்பான் தொடர்ந்
தோடிச் சென்ற உருப்பனையோட்டிக்
கொண்டிட்டுறைத்திட்டவுறைப்பன்மலை ,, 4. 3. 1

கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்
சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன்
திருவடி தாட்பாலடைந்த
தன்மையுதிவாரையறிந்துமே நம். 7. 5. 3

## நந்தவக்கிர—முரன்வதம்

பொங்கரவவக்கரனைக் கொன்றான் பே. 21

ஆழிவலவன் முரனுன் வலம் சுழிந்த ,, 78

காலநேமிவக்கரன் கரன்-முரன்
சிரமவை காலனோடு கூட
விற்குனித்த விற்கை வீரனே தி. ச. வி. 59

கடும் வக்கரன் கரன்-முரன் சிரமவை
இடந்துகூறு செய்த
பல்படைத் தடக்கைமாயனே ,, 104

காய்சினத்த காசி மன்னன் வக்கரன் ,, 107

வக்கரன்வாய்முன் கீண்ட மாயனேயென்று கலி. 5. 8. 5

## காண்டவ வனம் எரித்தல்

காண்டாவனமென்பதோர் காடு
அமரர்க்கரையனது கண்டவன் திற்க-
முனே மூண்டாரழலுண்ண முனிந்ததுவும் கலி. 2. 4. 2

காண்டவத்தைக் கனலெரிவாய்ப்
பெய்வித்தானை கலி. 2. 5. 2

கட்டேறு நீள் சோலைக் காண்டவத்தை
தீ மூட்டிவிட்டானை ,, 6. 8. 7

## ஏழ்விடை செற்றது - நப்பின்னை திருமணம்

மணமருவ மால் விடையேழ் செற்று பொ. 62

ஆயர் நிரை விடையேழ் செற்றவாறென்னே ,, 83

ஏறின் பெருத்தெருத்தங் கோடொசிய
பெண்ணசையின்
பின்போய் - எருத்திறுத்த நல்லாயரேறு பூ. 62

ஏறேழும் வென்றடர்த்த வெந்தை ,, 63

மால்விடையேழ் செற்றானை பே. 25

முற்றல் முரிஏற்றின் முன்னின்று
மொய்ம்பொழித்தாய் ,, 49

பின்னைக் காய் ஏற்றுயிரையட்டானெழில் ,, 85

வித்துமிட வேண்டுங்கொலோ
விடையடர்த்த பத்தியுழவன் நான். தி.23

வடிப் பவளவாயப் பின்னைதோளிக்கா வல்லேற்-
றெருத்திறுத்துக் கோப்பின்னுமானுன் குறிப்பு-நான். தி. 33

யாதுமிட்டிடைப்பின்னை
கேள்வனென்பர் தி. ச. வி. 13

நன்னிறத்தொரின்சொலேழை பின்னைகேள்வ மன்னுசீர் ,, 33

மையரிக்கண் மாதரார் திறத்து-முன் ஆனையன்று
சென்றடர்த்த மாயமென்ன மாயமே ,, 40

ஆயனாகி யாயர்மங்கை வேயதோள் விரும்பினாய் ,, 41

ஏறு சென்றடர்த்த வீச பேசு கூசமின்றியே ,, 42

பின்னுமாயர் பின்னை தோள்மணம் புணர்ந்ததன்றியும் ,, 55

விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேற்கண்மாதரார் ,, 92

பின்னை கேள்வ......பூட்டிவைத்தவென்னைநின்னுள்
நீக்கல் பூவை வண்ணனே ,, 99

ஏறடர்த்ததும் குல. 2. 3

பொய்சிலைக் குரலேற்றெருத்த மிறுத்த ,, 2. 5

ஆனேறேழ் வென்ருன் ,, 4. 1

வேழமுமேழ் விடையும்
விரவிய வேலைதனுள் வென்றுவருமவனே பெரி. 1. 5. 3

நப்பி(ன்)ணை தன் திறமா நல்விடையேழவிய
நல்லதிறலுடைய நாதனுமவனே ,, 1. 5. 7

நப்பின்னை காணிற்சிரிக்கும் ,, 2. 4. 9

எருதுகளோடு பொருது ஏதுமுலோபாய்
காணநம்பி ,, 2. 7. 6

பேடைமயிற்சாயற் பின்னைமணாளா ,, 3. 3 3

ஆயர்மடமகள் பின்னைக்காகி அடல் விடை
யேழினையும் வியப்பொருது வியர்த்து நின்ருனே ,, 4. 1. 4

நந்தகோபாலன் மருமகளே நப்பின்ஞய் திருப்பாவை. 18

கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக்கிடந்த மலர்மார்பா ,, 19

நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய் ,, 20

எருதும்வீழ நாச். தி. 4. 7

அடலாயர்தம்கொம்பினுக்கு இமில் ஏற்று வன்
கூன் கோட்டிடை யாடினை கூத்து தி. வி. 21

அமைப்பொலிந்த மென்தோளி காரணமா
வெங்கோட்டேறேழுடனே கொன்ருனையே
மனத்துக் கொண்டு பெ. தி. 48

அறுபதமுரலுங்கூந்தல் காரணம்
எழ்விடையடங்கச் செற்றனை தி. எ. கூ

தளவேழ் முறுவல்பின்னைக்காய்
வல்லானுயர்தலைவனாய் இளவேறேழுந்தழுவிய
எந்தாய் நம். 1. 5. 1

பின்னை நெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை
முன்னையமரர் முழு முதலானே ,, 1. 7. 8

கொண்டானேழ்விடை ,, 1. 8. 7

காம்பணைத்தோள் பின்னைக்காய்
ஏறுடனேழ் செற்றதுவும் ,, 2. 5. 7

ஏறேலேழும் வென்று ,, 2. 9. 10

வம்பவிழ் கோதை பொருட்டா
மால்விடையேழுமடர்த்த
செம்பவளத்திரள்வாயன் சிரீதரன் தொல்புகழ்பாடி ,, 3. 5. 2

வேயின்மலிபுரை தோளி பின்னைக்கு மணாளனை
ஆயபெரும்புகழ் எல்லையிலாதன பாடிப்போய்
காயம்கழித்து அவன்தாளிணைக் கீழ்ப்புகும்
காதலன் மாயமனிசரை என்சொல்லவல்லேன்
என்வாய் கொண்டே ,, 3. 9. 8

தோளிசேர் பின்னை பொருட்டு எருதேழ்தழ்
இக்கோளியார் ,, 4. 2. 5

கோவை வாயாள் பொருட்டு
ஏற்றினெருத்தமிறுத்தாய் நம். 4. 3. 1

நெடும்பணைத் தோள் மடப்பின்னை - அணைவான்
பொருவிடையேழடர்த்துகந்த ,, 4. 8. 4

இனவேறுகள் செற்றேனும் யானேயென்னும் ,, 5. 6. 6

குலவாயர் கொழுந்துக்கும் கேள்வன் ,, 5. 6. 11

எழுதேழடர்த்தஎன்கள்ள மாயவனே
கருமாணிக்கச்சுடரே ,, 5. 7. 9

வதுவை வார்த்தையுளேறு பாய்ந்ததும் ,, 5. 10. 2

கெண்டையொண்கண் வாசப்பூங்குழல்

பின்னை தோள்கள் மணந்ததும் ,, 6. 4. 2

இமிலேறுகள் செற்றதுவும் ,, 6. 4. 6

அன்றுரு வேழும் தழுவி நீ கொண்ட

ஆய்மகளன்பனே ,, 7. 2. 9

பின்னை தோள் மணந்த பேராயா ,, 8. 1. 7

வடிவேல் தடங்கண் மடப்பின்னை மணாளன் ,, 9. 8. 2

வாளேய் தடங்கண் மடப்பின்னை மணாளா ,, 9. 8. 4

மானை நோக்கி மடப்பின்னை தன் கேள்வனை ,, 9. 10. 4

வாள் கெண்டை யொண்கண் மடப்பின்னை

தன் கேள்வன் ,, 10. 4. 3

பின்னை மணாளன் பெ. தி. ம

அன்றுயர் குலமகளுக்கரையன் தன்னை தி. நெ. தா. 29

துடிகொள் நுண்ணிடைச் சுரிகுழல்

துளங்கெயிற்றிளங்கொடிதிறத்து

ஆயர் இடிகொள் வெங்குரலினவிடையடர்த்த வன். கலி. 1. 2. 3

தோளணங்கல்குல் செழுங்கயற்கண்ணி திறத்து

ஒருமறத்தொழில்புரிந்து-பாரணங்கிமிலேறேழும்

முன்னடர்த்த-பனிமுகில் வண்ணனெம்பெருமான் ,, 1. 4. 6

மானேய்மடநோக்கி திறத்து எதிர்வந்த

ஆனேழ்விடைசெற்ற அணிவரைத்தோளா ,, 1. 10. 7

பந்தணைந்த மெல்விரலாள்

பாவைதன் காரணத்தால்

வெந்திறலேறேழும் வென்றவேந்தன் ,, 2. 2. 4

தன் துணையாயர் பாவை நப்பின்னை தனக்கிறை

மற்றையோர்க்கெல்லாம் வன்துணை ,, 2. 3. 5

பிறையுடை வாணுதல் பின்னை திறத்து
முன்னொருகால்
செருவில்லுருமின்-மறையுடைமால்
விடையேழடத்தாற்கிடம் கலி. 2. 9. 9

இனவிடைகளேழடர்த்து ,, 2. 10. 7

ஆயர்பூங்கொடிக்கினவிடை பொருதவனிடம் ,, 3. 1. 5

மௌவல் குழலாய்ச்சி மென்தோள் நயந்து ,, 3. 2. 7

உருவக்கருங்குலாய்ச்சி திறத்து
இனமால்விடைசெற்று ,, 3. 3. 5

பஞ்சியமெல்லடிப் பின்னை திறத்து முன்னாள்
பாய்விடைகளேழடர்த்து ,, 3. 4. 4

பின்னை நன் காதலன் தன் பெருந்தோள்
நலம் பேணினாரல ,, 3. 7. 7

விடையோடவென்றாய்ச்சி மென்தோள்
நயந்த விகிர்தா ,, 3. 8. 9

சென்று சின விடையேழும் படவடர்த்துப்
பின்னை செவ்வித்தோள் புணர்ந்துகந்த திருமால் ,, 3. 10. 10

வாராரும் முலை மடவாள் பின்னைக்காகி
வளைமருப்பிற் கடுஞ்சினத்து வன் தாளார்ந்த
காரார் திண் விடையடர்த்து வதுவையாண்ட
...கண்ணன் ,, 4. 4. 4

வன்தாள் சேத்தொழில் சிதைத்துப்
பின்னை செவ்வித்தோள் புணர்ந்தவெந்தை ,, 4. 5. 3

எருதடர்த்த வெந்தை ,, 4. 5. 4

மின்னினன்ன நுண் மருங்குல்
வேயேய் தடந்தோள் மெல்லியற்கா—
மன்னுசினத்த மழவிடைகள்
ஏழன்றடர்த்தமால் ,, 5. 1. 6

செறுந்திண் திமிலேறுடையபின்னை
பெறுந்தன் கோலம் பெற்றார் கலி. 5. 2. 2

ஆய்ப்பாடி தன்னுள் கொம்பனார் பின்னை கோலம்
கூடுதற்கேறு கொன்றான் ,, 5. 9. 8

பின்னை பொருட்டு ஆன்வென்றானூர் ,, 6. 5. 4

விடையேழ் வென்று
மென்தோளாய்ச்சிக் கன்பனாய் ,, 6. 5. 5

முருக்கிலங்கு கனித்துவர் வாய்ப்பின்னைகேள்வன் ,, 6. 6. 8

பின்னைக்கு மணவாளன் ,, 6. 6. 9

மருவாத விடைதானேழும் வென்றான் ,, 6. 10. 5

இறித்திட்டு ஆன விடையேழும் வென்றாய் ,, 7. 7. 7

மழவிடையடர்த்து ,, 7. 8. 8

பைங்கண் மால்விடையடர்த்து ,, 8. 3. 3

பின்னை மணாளனாகி ,, 8. 6. 6

மாலார்விடையும்......மடிவித்து ,, 8. 6. 8

கொடியேரிடையாள் பொருட்டாக
வன்தாள் விடையேழன்றடர்த்த ,, 8. 6. 9

வியமுடைவிடையினம் உடைதர மடமகள்
குயமிடை தடவரை அகலமதுடையவர்......
கயமிடை கணபுரம் அடிகள் தமிடமே ,, 8. 7. 1

எருதிற இகல்செய்து துணைமலி முலையவள்
மணமிகு கலவியுள் ,, 8. 7. 2

விடையேழன்றடர்த்து வெகுண்டு ,, 8. 9. 3

ஆனைவாட்டியருளும் ,, 10. 1. 6

மால்விடையேழு மடர்த்து ,, 10. 9. 2

பூங்குருந்தொசித்து ஆனை காய்ந்து ,, 11. 2. 2

பொன்னங் கலையல்குலன்ன மென்னடைப்
பூங்குழல் பின்னை மணாளர் கலி. 11. 2. 5

வென்றி விடையுடனேழடர்த்த வடிகளை
கலிகன்றி சொல் ,, 11. 2. 10

தடமலர்க்கண்ணிக்காய்
ஆன்விடையேழன்றடர்த்தாற்காளாளரல்லாதார்
மானிடவரல்லர் ,, 11. 7. 9

(நப்பின்னை திருமணம் முடிந்தது)

பாரிஜாதாபஹரணம்

"தேவர்கள் இந்த்ரிய வசயர்கள்"

கற்பகக்காவு கருதிய காதலிக்கு
இப்பொழுதீவனென்று
இந்திரன் காவினில்-நிற்பன செய்து நிலாத்திகழ்
உய்த்தவன் பெரி. 1. 9. 9

என்னுதன்தேவிக்கு அன்றின்பப் பூவீயாதாள்
தன்னுதன் காணவே தண் பூமரத்தினை
வன்னுதப் புள்ளால் வலியப் பறித்திட்ட
என்னுதன் வன்மையைப் பாடிபற ,, 3. 9. 1

"விண்ணுளாரும் இந்த்ரிய வச்யர்கள்"
விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும்
செறுமைம்புலனிவை நம். 7. 1. 6

பட்டரவேரகலல்குல் பவளச் செவ்வாய்
பணைநெடுந்தோட் பிணை நெடுங்கண்
பாலாமின்சொல் மட்டவிழுங்குழலிக்கா
வானோர் காவில் மரங்கொணர்ந்தானடி யணைவீர் கலி. 3. 4. 8

ஏவினங்கன்னிக்காகி இமையவர் கோனைச் செற்று
காவளம் கடிதிறுத்துக் கற்பம் கொண்டு
போந்தாய் ,, 4. 6. 8

மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய்
வண்துவரை நட்டானை நாடி கலி. 6. 8. 7

## பாணாசுர பங்கம்

நின்றெதிராய—வாணன் தோள் ஒன்றிய
நூறைஞ்ஞூறுடன் துணிய பே. 90

மகனுமவன் மகன் தன் காதல் மகனைச்
சிறை செய்தவாணன்
தோள் செற்றான் கழலே
நிறை செய்தென்னெஞ்சே நினை ,, 92

மோடியோடு இலச்சையாய சாபமெய்தி முக்கணான்
கூடுசேனை மக்களோடு கொண்டு மண்டி வெஞ்சமத்து
ஓட வாணனாயிரங் கரங் கழித்த வாதிமால் தி. ச. வி. 53

குந்தமோடு வந்த...வாணனீரைஞ்ஞூறு
தோள்களைத்துணித்த நாள் ,, 70

வண்டுலாவு கோதை மாதர் இண்டவாணனீரைஞ்ஞூறு
தோள்களைத்துணித்த நாள் ,, 71

மாயப்பொருபடைவாணனை
ஆயிரந்தோளும் பொழிகுருதி பாயச்
சுழற்றிய வாழிவலலான் தி. ப. 7

மாவலிதன்னுடைய மகன்வாணன் மகளிருந்த
காவலைக்கட்டழித்த தனிக்காளை கருதும்மலை பெரி. 4. 3. 4

சென்றங்கு வாணனையாயிரந் தோளுந்
திருச்சக்கரமதனால்
தென்றித்திசைதிசை வீழச்செற்றாய் ,, 5. 3. 9

வாணன் திண்டோள் துணித்த வலியும் பெருமையும்
யான் சொல்லும் நீர்த்தல்ல தி. வி. 78

விறல் வாணனாயிரம் தோள்துணித்தீர் . நம். 2. 4. 2

வாணனை உள்வன்மைதீர
ஓராயிரம் தோள் துணித்த புள்வல்லாய் நம். 3. 8. 9

மேகலையால் குறைவில்லா மெலிவுற்றவகலல்குல்
போகமகள் புகழ்த்தந்தை விறல்வாணன்
புயம் துணித்து ,, 4. 8. 9

நிறைபெரும் போர்கள் செய்து
வாணனாயிரந் தோள் துணித்ததும் ,, 6. 4. 8

அப்பன் நேர்சரிவாணன்
திண்டோள் கொண்டவன்றே ,, 7. 4. 8

வாணபுரம் புக்கு முக்கட்பிரானைத்தொலைய
வெம்போர்கள் செய்து
வாணனையாயிரந்தோள் துணித்தான் ,, 7. 10. 7

போராளனாயிரந்தோள் வாணன் மாளப் பொருகடலை
யரண் கடந்து புக்குமிக்க பாராளன் தி. நெ தா. 20

செய்யனைச் நதிகிரியினால் வாணன் திண்டோள்
சேர்ந்தவன் கலி. 3. 4. 3

வாணனையாயிரந்தோள்களுந் துணித்தவன் ,, 4. 2. 5

அன்றியவாணனாயிரந்தோளும் துணிய
அன்றாழிதொட்டானை ,, 4. 3. 8

சடையானோட வடலவாணன் தடந்தோள்
துணித்த தலைவனிடம் ,, 5. 1. 7

வள்ளிகொழுநன் முதலாய மக்களோடு முக்கணான்
வெள்கியோட விறல்வாணன்
வியன்தோள் வனத்தைத் துணித்துகந்தான் ,, 6. 7. 6

விடையானோட வன்று விறலாழிவிசைத்தானை ,, 7. 6. 3

பெருந்தோள்வாணற்கருள்புரிந்து ,, 8. 6. 6

(பாணபங்கம் முடிந்தது)

"ஸ்கந்த பங்கம்"

வெற்புடைய நெடுங்கடலுள் தனிவேலுய்த்த
வேள் முதலாவென்றானூர் திரு. நெ. தா. 7

"பௌண்ட்ரக வாசுதேவ – காசிராஜ மாலி சுமாலி பங்கம்"

காய்சினத்த காசி மன்னன் வக்கரன் பவுண்டிரன்
மா சினத்த மாலி மா சுமாலி கேசி தேனுகன்
நாசமுற்று வீழ திரு. ச. வி. 107

புகராருருவாகி முனிந்தவனைப் புகழ் வீட
முனிந்துயிருண்டு
அசுரர் நகராயின பாழ்பட நாமமெறிந்து கலி. 2. 4. 7

"ஆழி கொண்டு இரவி மறைத்தது"

வானத்தியங்குமெரிகதிரோன் தன்னை
முயங்குமருள் தேராழியால் மறைத்ததென்
நீ திருமாலே பெரா. 8

பலமன்னர் போர்மாள வெங்கதிரோன்
மாயப் பொழில் மறையத்
தேராழியால் மறைத்தாரால் நான். தி. 16

நாழிகை கூறிட்டுக் காத்து நின்ற அரசர்கள்
தம்முகப்பே நாழிகை போகப்படை பொருதவன்
தேவகி தன் சிறுவன் ஆழிகொண்டன்றிரவி
மறைப்பச் சயத்திரதன்தலையைப்
பாழிலுருளப் படைபொருதவன் பக்கமே
கண்டார் பெரி. 4. 1. 8

திண்சக்கர நிழறுதொல்படையாய் நம். 6. 2. 5

சுடராழியினைப் பகலோன்
மறையப்பணிகொண்டு கலி. 2. 4. 3

பாழியால்மிக்க பார்த்தனுக்கருளிப்
பகலவனொளிகெடப்
பகலே ஆழியாலன்றங் காழியை மறைத்தான் கலி. 5. 7. 8

விசயற்காய் விறல் வியூகம் விள்ளச்
சிந்துக்கோன் வீழ ஊர்ந்த விமலனூர் ,, 6. 5. 8

பகல் கரந்த சுடராழிப் படையான் ,, 6. 9. 5

விலங்கலுறப் படையாலாழிதட்ட ,, 8. 9. 3

(ஜயத்ரத வதம் முடிந்தது)

## க்ருஷ்ணன் தூது

பஞ்சவர் தூதனாய்ப் பாரதங்கை செய்து பெரி. 1. 8. 3

பொய்ச்சூதில் தோற்ற பொறையுடை
மன்னர்க்காய் - பத்தூர்

பெறாதன்று பாரதங்கை செய்த அத்தூதன் ,, 2. 1. 1

துரியோதனன் பக்கல் சென்றங்குப்
பாரதங் கையெறிந்தான் ,, 2. 6. 4

சீரொன்று தூதாய்த் துரியோதனன் பக்கல் ,, 2. 6. 5

பஞ்சவர் தூதனாய்ப் பாரதங்கை செய்து ,, 3. 9. 5

தூது சென்றாய் குரு பாண்டவர்க்காய் ,, 5. 3. 4

மன்னர் பெருஞ்சவையுள் வாழ்வேந்தர் தூதனாய்
சென்றதுவும் பெ. தி. ம.

நாடுடை மன்னர்க்குத் தூது செல் நம்பிக்கு நம். 6. 6. 4

அவனே பின்னோர் தூது ஆதி மன்னர்க்காகிப்
பெருநிலத்தார் இன்னார் தூதனென நின்றான் கலி. 2. 2. 3

பஞ்சபாண்டவர்க்காகி வாயுரை தூது
சென்றியங்கும் என் துணை ,, 2. 3. 5

தூதிற் சென்று அப்பொய்யறை வாய்ப்
புகப் பெய்த மல்லர் மங்கக் காய்ந்தானை — கலி. 2. 5. 5

பாரேறு பெரும்பாரம் தீரப்பண்டு
பாரதத்துத்தூதியங்கி — ,, 2. 10 8

மன்னர் தூது வருயவனூர் சொல்வீர் — ,, 3. 7. 4

மூத்தவர்க்கரசு வேண்டிமுன்பு தூதெழுந்தருளி — ,, 4. 6. 7

தூதுவேந்தர்க்காய — ,, 5. 2. 1

மன்னர்க்காய் முன்னம் சென்ற தூதாளன் — ,, 5. 5. 6

கோதில் செங்கோல் குடைமன்னரிடை
நடந்ததூதா — ,, 6. 2. 9

சென்றுன் தூதுபஞ்சவர்க்காய — ,, 8. 6. 9

அரவு நீள்கொடியோனவையுளாசனத்தை
அஞ்சிடாதேயிட அதற்குப்பெரிய மாமேனியண்ட
மூடுருவப் பெருந்திசை யடங்கிட நிமிர்ந்தோன் — ,, 9. 1. 8

துன்னுமாமணிமுடிப் பஞ்சவர்க்காகி
முன் தூது சென்ற — ,, 9. 7. 2

அன்று பாரதத்து ஐவர் தூதனாய்ச்
சென்றமாயனைச் செங்கண் மாலினை — ,, 11. 1. 10

கோதைவேல் ஐவர்க்காய் மண்ணகலம்
கூறிடுவான் தூதனாய் மன்னவனாற்
சொல்லுண்டான் — ,, 11. 5. 7

(க்ருஷ்ணன் தூது முடிந்தது)

## மதுகைடப நிராஸம்

நேரா நிசாசரர் மேல் பேராழிகொண்ட பிரான் — பொ. 83

வாய்ந்த மதுகைடபரும் வயிறுருகி மாண்டார் — பே. 66

இகழ்ந்தாயிருவரையும் வீய — நான். தி. 24

உளைந்திட்டெழுந்த மதுகைடவர்கள்
உலப்பில் வலியால் அவர் பால் வயிரம்
விளைந்திட்ட தென்றெண்ணி விண்ணோர் பரவ
அவர் நாளொழித்த பெருமான் க.பி. 10. 6. 3

## பார்த்தசாரதி

திரிந்தது வெஞ்சமத்துத் தேர்கடவி பூ. 15

புகழ்ந்தாய் சினப்போர்ச் சுவேதனைச்
சேனாபதியாய் மனப்போர் முடிக்கும் வகை நான். தி. 24

மெய்தெரிந்தாரென் செய்யார் வேறானார் நீறாக
கைதெரிந்து காட்டிக் களப்படுத்து ,, 94

பொய்யிலேறுடு மெய்யுமாய் தி. ச. வி. 26

பார்மிகுத்த பாரமுன் ஒழிச்சுவானருச்சுனன்
தேர்மிகுத்து மாயமாக்கி நின்றுகொன்று வென்றிசேர்
மாரதர்க்கு வான் கொடுத்து வையம் ஐவர் பாலதாம்
சீர்மிகுத்த நின்னலாலோர் தெய்வம்
நான்மதிப்பனே ,, 89

மெய்யர்க்கே மெய்யனாகும்-பொய்யர்க்கே
பொய்யனாகும் திருமாலை. 15

தாரித்து நூற்றுவர்தந்தை சொல்கொள்ளாது
பாரித்தமன்னர்படப்
பஞ்சவர்க்கு அன்று தேருய்த்த கைகளால்
சப்பாணி பெரி. 1. 6. 6

போரொக்கப் பண்ணி இப் பூமிப்பொறை தீர்ப்பான்
தேரொக்க ஊர்ந்தாய் செழுந்தார் விசயற்காய் ,, 1. 8. 6

கொத்துத்தலைவன்குடி கெடத்தோன்றிய அத்தன் ,, 1. 9. 3

வேந்தர்களுட்க விசயன் மணித்திண்தேர்
ஊர்ந்தவன் ,, 1. 9. 4

பார்த்தற்குத் தேரோன்றை யூர்ந்தாற்கு பெரி. 2. 6. 5

வெள்ளைப்புரவிக்குரக்கு வெல்கொடித்தேர்
மிசை முன்பு நின்று
கள்ளப்படைத்துணையாகிப் பாரதங்
கைசெய்யக்கண்டார் ,, 4. 1. 7

மன்னர் மறுக மைத்துனன்மார்க்கொரு
தேரின்மேல் முன்னங்கு நின்று
மோழையெழுவித்தவன் மலை ,, 4. 2. 7

அன்று தேர்கடவிய பெருமான்கனைகழல்
காண்பதென்று கொல் கண்களே நம். 3. 6. 10

மாயப் போர்த் தேர்ப்பாகனுக்கு ,, 4. 6. 1

தேசமறிய வோர் சாரதியாய்ச் சென்று ,, 7. 5. 9

சித்திரத்தேர்வலவா ,, 7. 8. 3

புக்க நல்தேர் தனிப்பாகா ,, 8. 5. 8

பார்த்தற்காயன்று பாரதம் கை செய்திட்டு
வென்ற பரஞ்சுடர் கலி. 1. 8. 4

பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு
பார்த்தன் தன் தேர் முன் நின்றானை ,, 2. 3. 1

இந்திரன் சிறுவன் தேர் முன் நின்றானை ,, 2. 3. 6

பார்த்தன் செல்வத்தேரேறு சாரதியாய் ,, 2. 10. 8

வேல் கொள் கைத்தலத்தரசர்
வெம்போரினில் விசயனுக்காய் மணித்தேர்
கோல கொள் கைத்தலத்தெந்தை பெம்மான் ,, 3. 1. 9

ஒரு கால தேரினையூர்ந்து தேரினைத்துரந்த
செங்கண்மால் ,, 4. 10. 5

கறையார் நெடுவேல் மறமன்னர் வீய
விசயன் தேர்கடவி கலி. 5. 1. 8

ஐவர்க்காய் அமரிலுய்த்த தேராளன் ,, 5. 5. 7

வெள்ளைப்புரவித்தேர் விசயற்காய் விறல்வியூகம்
விள்ள......ளர்ந்தவிமலன் ,, 6. 5. 8

பார்த்தன் தன் தேரையூரும் ,, 6. 5. 9

மீடை யா வந்த வேல்மன்னர் வீய விசயன் தேர்கடவி ,, 6. 7. 7

மண்ணனின் மீ பாரங்கெடுப்பான் மறமன்னர்
பண்ணனின் மேல்வந்த படையெல்லாம், பாரதத்து
விண்ணனின் மீதேற விசயன் தேரூர்ந்தானை ,, 6. 8. 8

பாரதத்தொரு தேரைவர்க்காய்ச் சென்று
இரங்கியூர்ந்து ,, 7. 3. 4

பாரித்தெழுந்த படைமன்னர் தம்மைமாளப்
பாரதத்துத் தேரில் பாகனாயூர்ந்த தேவதேவன் ,, 7. 5. 2

பஞ்சவர்பாகன் ,, 9. 1. 4

பன்னியபாரம் பார் மகட்கொழியப் பாரத மா பெரும்
போரில் மன்னர்கள் மடியமணி நெடுந்திண்டேர்
மைத்துனர்க்குய்த்தமாமாயன் ,, 9. 1. 9

கவ்வைவக்களிற்று மன்னர்மானக் கலிமான்தேர்
ஐவர்க்காய் அன்றமரிலுய்த்தான் ,, 9. 6. 5

பார்த்தனுக்கன்றருளிப் பாரதத்தொரு தேர்
முன்னின்று காத்தவன் றன்னை ,, 9. 9. 8

மன்னிலங்கு பாரதத்துத் தேரூர்ந்து ,, 11. 3. 1

பார்மன்னர் மங்கப் படைதொட்டு வெஞ்சமத்துத்
தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தான் ,, 11. 5. 8

(பார்த்தஸாரதி வைபவம் முடிந்தது)

## பாரதப்போர்

வெண்சங்கம் ஊதியவாய் பொ. 37

ஐவர்க்காய்-அன்று மிடைந்தது பாரதவெம்போர் பே. 28

வெற்றிப்பணிலம் வாய்வைத்துகந்தான் பண்டு ,, 60

நின்றுகொன்று வென்றிசேர்
மாரதர்க்கு வான்கொடுத்து வையமைவர்பாலதாம்
சீர் மிகுத்த-ஓர்தெய்வம் தி. ச. வி. 89

மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும்மற்றும்
பலர்குலைய நூற்றுவரும் பட்டழிய பெரி. 2. 1. 2

பற்றார் நடுங்க முன்பாஞ்சசன்னியத்தை
வாய்வைத்த போரேறே-சிற்றாயர்சிங்கமே ,, 3. 3. 5

வெள்ளை விளிசங்கு வெஞ்சுடர்த்திருச்சக்கரம்
ஏந்துகையன் உள்ளவிடம் வினவில்
உமக்கிறை வம்மின் சுவடுரைக்கேன் வெள்ளைப்
புரவிக்குரக்குவெல் கொடித்தேர்மிசை முன்புநின்று
கள்ளப்படைத்துணையாகிப் பாரதங்
கை செய்யக்கண்டாருளர் ,, 4. 1. 7

குறுகாத மன்னரைக் கூடுகலக்கி
வெங்கானிடைச் சிறுகால் நெறியே
போக்குவிக்குஞ் செல்வன் ,, 4. 2. 8

பாண்டவர் தம்முடைய பாஞ்சாலி மறுக்க
மெல்லாம் ஆண்டங்கு நூற்றுவர்தம்
பெண்டிர் மேல்வைத்த வப்பன் மலை ,, 4. 3. 6

திரைபொருகடல சூழ் திண்மதின் துவரை வேந்து
தன்மைத்துனன்மார்க்காய்
அரசினையவிய அரசினையருளும்
அரிபுருடோத்தமன் அமர்வு ,, 4. 7. 8

அங்கோர் பொய்ச்சுற்றம் பேசிச் சென்று
பேதஞ்செய்தெங்கும் பிணம் படுத்தாய் பெரி. 5. 3. 4

மைத்துனன்மார்களை வாழ்வித்து
மாற்றலர் நூற்றுவரைக் கெடுத்தாய் ,, 5. 8. 8

தொல்லைக் கண் மாத்தரைக் கெல்லாம்
ஓரைவரையே மாறாகக் காத்தானைக்
காண்டும் கொலோ பெ. தி. 19

கொல்லா மாக் கோல் கொலை செய்து பாரதப்போர்
எல்லாச் சேனையும் இரு நிலத்தவித்த வெந்தாய் நம். 3. 2. 3

நீர்மையில் நூற்றுவர் வீய
ஐவர்க்கருள் செய்து நின்று
பார்மல்கு சேனை அவித்த பரஞ்சுடரை நினைந்தாடி ,, 3. 5. 7

பண்டு நூற்றுவர் அடவரும் படை மங்க
ஐவர் கட்காகி வெஞ்சமத்து
அன்று தேர்கடவிய பெருமான் ,, 3. 6. 10

அடியோங்கு நூற்றுவர்வீய
அன்றைவர்க்கருள் செய்த நெடியோனை ,, 3. 7. 11

போரப்பாகு தான் செய்து
அன்றைவரை வெல்வித்த ,, 4. 6. 1

வரிவளையால்
குறை வில்லாப் பெரு முழக்காலடங்காரை
எரியழலம் புக ஊதி இருநிலமுன் துயர் தவிர்த்த ,, 4. 8. 8

திறம் காட்டியன்றைவரைக் காத்தேனையென்னும் ,, 5. 6. 5

மாறுசேர்படை நூற்றுவர் மங்க
ஓரைவர்க்காயன்று மாயப்போர் பண்ணி
நீறு செய்த வெந்தாய் ,, 5. 7. 4

பெரிய பாரதம் கை செய்து ஐவர்க்குத் திறங்கள்
காட்டியிட்டுச் செய்து
போன மாயங்களும் நம். 5. 10. 1

மண்மிசைப்பெரும் பாரம் நீங்க ஓர்பாரதமா
பெரும்போர் பண்ணி
மாயங்கள் செய்து
சேனையைப் பாழ்பட நூற்றிட்டு ,, 6. 4. 10

குருநாடுடை யைவர்கட்காய்
ஆடிய மாநெடுந்தேர்ப்படை நீறெழச்
செற்றபிரான் ,, 6. 8. 3

நூற்றுவரை யன்று மங்க நூற்ற
நிகரில் முகில வண்ணன் நேமியான் ,, 7. 3. 10
மன்னர் ஆறுடைச்சேனை நடுங்குமொலி ,, 7. 4. 5

தாயம் செறுமொரு நூற்றுவர்மங்க
வோரைவர்க்காய்த்
தேசமறிய வோர்சாரதியாய்ச் சென்று
சேனைநாசம் செய்திட்டு நடந்தநல்வார்த்தை ,, 7. 5. 9

ஐவர்க்காய்க் கொடுஞ்சேனை தடிந்து ,, 7. 6. 10

அமரது பண்ணியகலிடம் புடைசூழ்
அடுபடை யவித்தவம்மானே ,, 8. 1. 4

தக்க வைவர் தமக்காயன்று ஈரைம்பதின்மர்
தாள்சாயப் புக்கநல்தேர்த்தனிப்பாகா ,, 8. 5. 8

பாரதம் பொருதமாயா-உன்னையெங்கே
காணகேனே ,, 8. 5. 10

மன்னஞ்சப் பாரதத்துப் பாண்டவர்க்காய்ப்
படைதொட்டான் ,, 10. 6. 4

ஓர்தேரால்மன்னிலங்கு பாரதத்தை மாள ஊர்ந்த
வல்ராயுருவின்மாகளிற்றை தி. நெ. தா. 26

முன்னுலகம் பொறைதீர்த்து ஆண்டான் கலி. 2. 4. 2

புலமன்னு வடம்புனை கொங்கையினுள் பொறைதீர
முனாடு வாளமரில் பலமன்னர்பட-
விலமன்னனுமாயுலகாண்டவன் ,, 2 4. 3

பாங்காக முனைவரொடன்பளவிப்
பதிற்றைந்திரட்டிப் படைவேந்தர் பட-
சிங்காச் செருவில் திறைகாத்தவன் ,, 2. 4. 4

சேனை செருக்களத்துத் திறலழியச்
செற்றான்றன்னை ,, 2. 10. 8

மாற்றரசர் மணிமுடியுந்திறலுந்தேசும்
மற்றவர்தம் காதலிமார் குழையும்......உடன்கழல ,, 4. 4. 1

பல்லரசவிந்து வீழப்பாரதப்போர் முடித்தாய் ,, 4. 6. 6

பாரதம் கையெறிந்து ,, 4. 10. 5

வாம்பரி யுக மன்னர் தமுயிர்செக
ஐவர்கட்கரசளித்த ,, 5. 3. 4

பந்தார் விரலாள் பாஞ்சாலி கூந்தல் முடிக்கப்
பாரதத்துக் கந்தார் களிற்றுக்கழல் மன்னர்
கலங்கச் சங்கம் வாய்வைத்தான் ,, 6. 7. 8

உரங்களாலியன்ற மன்னர்கள் மாள......
இன்னருள் செய்யுமெம் பிரானை ,, 7. 3. 4

கயங் கொள் புண் தலைக்களிறுந்து வெந்திறல்
கழல் மன்னர் பெரும் போரில் மயங்க
வெண்சங்கம் வாய் வைத்த மைந்தன் ,, 8. 5. 4

செரு வழியாத மன்னர்கள் மாளத்
தேர் வலங்கொண்டவர் செல்லும்

அரு வழிவான மதர் படக் கண்ட ஆண்மை
கொலோ வழியேன் கான் ,, 10. 9. 5

(பாரதப் போர் முடிந்தது)

(குதிரைவடிவாய் தீர்த்தது)

| | |
|---|---|
| மோழையெழுவித்தவன் மலை | பெ. 4. 2. 7 |
| மன்னஞ்சப் பாரதத்து...படைதொட்டான் | நம். 10. 6. 4 |

## அசுரர்கள் வதம்

| | |
|---|---|
| திறம்பாமலசுரரைக் கொன்றானையென்னும் | ,, 5. 6. 5 |
| கொடு வல்லசுரர்குலமெல்லாம் சூறாய் நீறாய்<br>நின்றுகிச் சீறுவெறியும் திருநேமி வல்லவர்<br>தெய்வக்கோமானே | ,, 6. 10. 2 |
| அடலாழியேந்தி யசுரர்வன்குலம்<br>வேர் மருங்கறுத்தாய் | ,, 7. 1. 5 |
| உட்குடை யசுரருயிரெல்லா முண்ட | ,, 7. 2. 3 |
| அசுரர் வன்கையர் கூற்றமே | ,, 8. 1. 8 |
| அசுரர் வன்கையர் வெங்கூற்றை | ,, 8. 4. 8 |
| மருள்கொள் செய்கை யசுரர் மங்க<br>வடமதுரைப்பிறந்தாற்கு | ,, 9. 1. 3 |
| அதிர்கொள் செய்கை யசுரர் மங்க<br>வடமதுரைப்பிறந்தாற்கு | ,, 9. 1. 5 |
| இகலிடத்தசுரர்கள் கூற்றம் | ,, 9. 9. 2 |
| குதற்று வல்லசுரர்கள் கூற்றம் | ,, 10. 1. 8 |
| அசுரரை என்றும் துணிக்கும் வல்லரட்டன் | ,, 10. 1. 9 |

"தேவாசுர யுத்தம்"

| | |
|---|---|
| தேவாசுரம் பொருவாய் செற்று | பே. 48 |

(அசுரர்கள் வதம் முடிந்தது)

(ஸ்ரீக்ருஷ்ணாவதாரம் முடிந்தது)

## பலராமாவதாரம்

முன்னலோர் வெள்ளிப் பெருமலைக்குட்டன்
மொடு மொடு விரைந்தோடப்
பின்னைத் தொடர்ந்ததோர் கருமலைக்குட்டன்
பெயர்ந்தடியிடுவது போல் பெரி. 1. 7. 5

செம் பொற் கழலடிச் செல்வா பலதேவா திருப்பாவை. 17

பிலம்பன் தன்னைப் பண்ணழியப்
பலதேவன் வென்ற நாச். தி. 12. 7

ஒன்றைக் குழையும் நாஞ்சிலும்
ஒருபால் தோன்றத் தோன்றி
வெற்றித் தொழிலார் வேல் வேந்தர் விண்பாற் செல்ல
வெஞ்சமத்து செற்ற கொற்றத் தொழிலானை கலி. 8. 8. 6

மைந்நம்பு வேற்கணல்லாள் முன்னம் பெற்ற
வளை வண்ண நன்மாமேனி
தன்னம்பி நம்பியுமிங்கு வளர்ந்தது
அவனிவை செய்தறியான் ,, 10. 7. 4

## கல்கி அவதாரம்

கடும்பரிமேல் கற்கியை நான்
கண்டுகொண்டேன் கலி. 2. 5. 3

கற்கி ,, 8. 4. 7

கற்கியுமானன் தன்னை ,, 8. 9. 10

(கல்கி அவதாரம் முடிந்தது)



நம்பெருமாள்

திருவரங்கம்

ஆஸ்தாம் தே குணராசிவத் குண பரீவாஹாத்மகாம் ஜந்மநாம்
ஸங்க்யா பௌம நிகேதநேஷ்வபி குட குஞ்ஜேஷு ரங்கேச்வர !
அர்ச்ய: ஸர்வ ஸஹிஷ்ணு: அர்ச்சக பராதீநாகிலாத்மஸ்திதி:
ப்ரீணீஷே ஹ்ருதயாலுபி: தவதத: சீலாத் ஜடீபூயதே—

